# சென்றவிடமெல்லாம்

## ஜூபிடரின் சிறப்பு...

# மோகினி

மதராஸ் - சாகர்

,, - கெயிட்டி

,, லக்ஷ்மி (பெரம்பூர் பாரக்ஸ்)

மதுரை - நியூ சினிமா

கோயமுத்தூர் - ராயல்

திருச்சிராப்பள்ளி - ஸ்டார்

சேலம் - சரஸ்வதி

தஞ்சாவூர் - நியூ டவர்

திருநெல்வேலி - ராயல்

வேலூர் - சாயிபாபா

காஞ்சீவரம் - கண்ணன்

சிதம்பரம் - தில்லை

கும்பகோணம் - ராஜா

பாண்டிச்சேரி - ரத்னா

திருப்பாபுலியூர் - முத்தையா

தூத்துக்குடி - ஜோஸப்

கரூர் - அம்பிகை

விருதுநகர் - ராதா

விழுப்புரம் - சீதாராம்

நாகப்பட்டிணம் - ஸ்டார்

காரைக்குடி - ராம விலாஸ்

திருவண்ணாமலை - லீலா

பெஜவாடா - ஜெய் ஹிந்த்

காக்கிநாடா - மெஜஸ்டிக்

விசாகப்பட்டிணம் - பூர்ணா

குண்டூர் - நியூ சிடி

தெனாலி - ஸ்வராஜ்யா

மசூலிப்பட்டணம் - பிருந்தாவனம்

சித்தூர் - ப்ரேமளா

விஜயநகரம் - பூர்ணா

பீமாவரம் - வெல்கம்

எல்லூர் - கோபாலகிருஷ்ணா

பாலக்காடு - நியூ தியேட்டர்

5—12—48 முதல்

திருவனந்தபுரம் - நியூ தியேட்டர்

நாகர்கோயில் - அழகப்பா

கொல்லம் - லக்ஷ்மி

எர்ணாகுளம் - மேனகா

திருச்சூர் - ராம வர்மா

# தூத்துக்குடி - கொழும்பு சர்வீஸ்

## "V. O. C"

பெயரால் கப்பல்



தமிழ்நாட்டில் முதல் ஸ்டீமர்



தூத்துக்குடிக்கும் கொழும்பிற்குமிடையே நடைபெற்று வரும் ஸ்டீமர் சர்விசை 1—1—1949 முதல் கம்பெனி நடத்துவதற்கு சகல ஏற்பாடுகளும் நடைபெற்று வருகின்றன. லண்டனிலுள்ள இந்திய வர்த்தகக் கமிஷனர் மூலம், பிரயாணிகள் - சரக்கு - ஆடுமாடுகள் ஏற்றத்தகுந்த 1067 டன் ஸ்டீமர் ஒன்று வாங்க ஏற்பாடுகள் முடிவாகியிருக்கிறது. அது வகைக்கு சென்னை சர்க்காரும் ரூ. 7,50,000/- மூன்று வருஷத்திற்கு சில நிபந்தனைகளின் பேரில் வட்டியின்றி கொடுத்து உதவ முன் வந்திருக்கிறார்கள். கப்பல் வைத்து நடத்துவதில் வருஷத்திற்கு சுமார் 3 லக்ஷ ரூபாய் லாபம் எதிர்பார்க்கப்படுகிறது.

பங்கு ஒன்றுக்கு ரூ. 100/-. அப்ளிகேஷன், அலாட்மெண்ட் தொகை ரூ. 50/-ம் முதலில் கட்ட வேண்டும். பாக்கி தொகை இரண்டு கால் (Calls) ஆக வசூலிக்கப்படும்.

தமிழ் நாட்டின் முதல் ஸ்டீமரை கப்பலோட்டிய வீரத் தமிழன் "V. O. சிதம்பரம்" அவர்கள் பெயரால் டைரக்டர்கள் ஓட்ட விரும்புவதாலும், 1—1—49-க்குள் கப்பல் விடவேண்டியிருப்பதாலும், மக்களின் ஆதரவு பெருமிதமாகவும் உடனடியாகவும் எதிர்பார்க்கப்படுகிறது.

ஆபிஸ் :

**AIR. STEAMER & GENERAL AGENCIES LTD.,**

17, HUNTERS ROAD
VEPERY, MADRAS

34, GREAT COTTON ROAD
TUTICORIN



கமலா கோட்னிஸ்

தனது அழகிய மேனியை

லக்ஸ்

டாய்லட்

சோப்பினால்

பாதுகாத்துக்கொள்கிறாள்!



சுந்தரவதனி கமலா சொல்வதாவது: "என் மேனி அழகை லக்ஸ் டாய்லட் சோப்பினாலேயே காப்பாத்திக்கொள்கிறேன். சுத்தமானதும் சௌமியமானதுமான இச்சோப்பின் சுறுசுறுப்பான நுரை சருமத்தை சுத்தம் செய்வதுடன், அப்பழுக்கற்றதாகவும் சோபையுடையதாகவும் வைத்துக் கொள்கிறது. மேனி அழகை முக்கியமாகக் கருதும் ஒவ்வொரு மங்கையும் தவறாமல் லக்ஸ் டாய்லட் சோப் உபயோகிப்பதை ஒரு பழக்கமாகக்கொள்ளவேண்டும்."




# லக்ஸ் டாய்லட் சோப்

*சினிமா நட்சத்திரங்களின் அழகு தரும் சோப்!*

LTS. 176-23 TM

# சரும உபாதை மாயமாய் மறைந்தது



"சில வருஷங்களாக அடிக்கடி நான் சரும உபாதைக்குள்ளாகி நமைச்சலால் அவதிப்பட்டேன். கடைசியாக என் மகன் 'வல்டேர்மா'வைப் பற்றி குறிப்பிட்டான். முதல் தடவையாக அதை உபயோகித்தபோதே மிகவும் ஹிதமளித்தது. நமைச்சலும் மாயமாய் மறைந்தது. சரும உபாதையே அடியோடு அகன்றதுடன் அவ்வுபாதை மீண்டும்வரவில்லை......" —F. H. கிலெண்டா

## இருவித கிருமி நாசன சக்தி

ஹிதமளிக்கும் வல்டேர்மா நேரிடையாக சருமத்தின் மீது பட்டவுடனேயே, அதன் இருவித கிருமிநாசன சக்திகளும் — ஒவ்வொன்றும் பலவித கொடிய கிருமிகளுக்கு சத்துரு — அநேக வித சரும வியாதிகளுக்கும் மூல காரணமாகும் கிருமிகளை அடியோடு அழித்து விடுகிறது. நமைச்சல் அடங்கி, சருமம் பளிச்சென்று சுத்தமாகவும் ஆரோக்யமாகவும் விளங்குகிறது. எக்ஸிமா, படை, கொப்புளம், சிராய்ப்பு, பருக்கள் மற்றும் இதர சரும நோய்களும் வல்டேர்மாவால் குணமடைகின்றன.

## வெண்மையானது - பிசுக்கற்றது

புதுமை, முற்றிலும் வேறுபட்ட தன்மை, நீரில் எண்ணெயின் சேர்க்கை ஆகிய அடிப்படை ஆதாரங்களைக் கொண்டு தயாரிக்கப்பட்ட வல்டேர்மா, நோய் கண்ட சருமத்திலுள்ள விஷத்தை வெளியேற்றுவதோடு மீண்டும் நோய் தொத்தி விடாமல் தடுக்கிறது. சரும வைத்திய நிபுணர்களால் பரிசீலனை செய்யப்பட்டது. மெழுகு போன்றது. ஆனால் பிசுக்கற்றது. கறை படாது. பூசின இடம் புலனாகாது. எந்த இடத்திலும், எந்த நேரத்திலும் உபயோகிக்கலாம். எல்லா சிறந்த கெமிஸ்டுகளிடமும், மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

இந்தியாவின் பூரண விநியோகஸ்தர்கள்:
ஜியாப்ரே மானர்ஸ் & கோ., லிமிடெட்
பம்பாய் — கல்கத்தா — டில்லி — மதராஸ்




DOUBLE-ANTISEPTIC

**Valderma**

THE *Non-Greasy* BALM

மகத்தான ஆரம்ப விழா!

கண்ணுக்கு
அழகு
கருத்துக்கு
விருந்து!

மாடர்ன் தியேட்டர்ஸ்....

# ஆதித்தன் கனவு

பாட்டு:
பாபநாசம் சிவன்
சங்கீதம்:
ஜி. ராமநாதன்....
ஸினேரியோ:
எம்.எல்.டாண்டன்

டைரக்ஷன்:
T.R.சுந்தரம்
B.A.B.Sc.(Leeds)

டிசம்பர்
**11**
முதல்
சென்னையிலும்
மற்றும் முக்கிய
நகரங்களிலும்
கண்டு
ஆனந்தியுங்கள்!

நடனம்:
லலிதா & பத்மினி
தாரா சௌத்ரி

மாடர்ன் தியேட்டர்ஸ் லிமிடெட், சேலம் & மதுரை

# கல்கி பொருளடக்கம்

மலர் 8 } இதழ் 19 — டிசம்பர் 5 — { சர்வதாரி ஐ கார்த்திகை 20



"கல்கி"யில் வெளியாகும் கதைகளின் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனையே.

டிசம்பர் 20ம் தேதி வெளிவருகிறது!

# நாட்டியம்



ஆசிரியர் : ரஞ்சன், பி. ஏ., எல். டி.

★

- கலைஞருக்கு நல் விருந்து
- கலாசிரியருக்குத் தோழன்
- சிறுவர்களுக்கு நல்லாசிரியன்
- பொது மக்களுக்குப் பொழுதுபோக்கு
- பெற்றோருக்கு இன்றியமையாதது

★

பிரதி ஒன்றுக்கு அணா 4

வருட சந்தா ரூ. 3/-

மணியார்டர் மூலம் அனுப்பவும்.

ஏஜென்ஸி, விளம்பர நிபந்தனைக்கு எழுதவும்

# நாட்டியம்

கதீட்ரல் போஸ்ட் : மதராஸ் - 6

---

திருவல்லிக்கேணி

நேஷனல் (பெண்கள்) ஹைஸ்கூல்

கட்டிட நிதிக்காக



## ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி

உதவும் சங்கீதக் கச்சேரி

★

ஆஸ்தான வித்வான்

மைசூர் சௌடய்யா ... பிடில்

கல்பாத்தி ராமநாதன் ... மிருதங்கம்

ஆலங்குடி ராமச்சந்திரன் ... கடம்

★

மேன்மை தங்கிய

சென்னை கவர்னர் பவநகர் மகாராஜா

அவர்கள் தலைமை வகிக்கிறார்கள்

★

5 - 12 - 48 ஞாயிறு மாலை 6 மணிக்கு

சென்னை மவுண்ட் ரோடு

ராஜாஜி ஹாலில்

★

டிக்கட்டுகள் :

ரூ. 250/- ரூ. 100/- ரூ. 50/-

ரூ. 25/- ரூ. 10/- ரூ. 5/-

ஒலிபெருக்கி : திருச்சி ரேடியோ சேல்ஸ் அண் சர்வீஸ்



கல்கி

மலர் 8 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 19

# என்ன சேதி?

## கதி மோட்சம்

தமிழ் நாடு, எத்தனையோ துறையில் நம் காலத்தில் ஆச்சரியமான முன்னேற்றம் அடைந்திருக்கிறது. ஆனால் சினிமாத் துறை மட்டும் எல்லா முன்னேற்ற முயற்சிகளுக்கும் டிமிக்கி கொடுத்துக் கொண்டு நாளுக்குநாள் சீர்கேடு அடைந்து வருகிறது. இந் நிலைமை குறித்துத் தமிழ் நாட்டின் மேன்மையில் சிரத்தை யுள்ளவர்கள் எல்லாரும் கவலைப்பட்டு வந்திருக்கிறார்கள். புராணக் கதைப் படங்களில் நமது பக்திக்குரிய தேவர்களையும் தேவிகளையும் படுத்திவைக்கும் பாடு பயங்கரமானது. சுவாமி பெயரைச் சொல்லி, சொல்ல முடியாத ஆபாசங்களை யெல்லாம் புகுத்தி விடுகிறார்கள். சமூகப் படங்கள் என்னும் ஆபாசக் களஞ்சியங்களைப் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை. இந்த நிலையில், வரும் வருஷத்துக்கு நியமிக்கப்பட்டிருக்கும் சென்ஸார் போர்டு திருப்திகரமாக அமைந்திருப்பது ஆறுதல் அளித்து நம்பிக்கையையும் ஊட்டுகிறது. பெண் குலத்துக்குத் தொண்டு செய்வதில் தீவிரமாக ஈடுபட்டிருக்கும் ஸ்ரீமதி மஞ்சுபாஷிணி, ஸ்ரீமதி சரோஜினி வரதப்பன், ஸ்ரீமதி சாவித்ரி ராஜன், ஸ்ரீமதி பாரிஜாதம் நாயுடு ஆகிய பெண்மணிகள் புது சென்ஸார் போர்டில் ஸ்தானம் பெற்றிருக்கிறார்கள். இவர்கள் பிடிவாதமாகவும் உறுதியாகவும் பிரயத்தனம் செய்தால் தமிழ்நாட்டு சினிமாக்கள் ஆபாசங்கள் நீங்கி ஸ்திரீ புருஷர்களும் குழந்தைகளும் கூச்சமின்றிப் பார்க்கக் கூடியவாறு உயர்தரமாக அமையலாம். இத்தகைய சிறந்த சென்ஸார் போர்டை நியமித்த கல்வி மந்திரி ஸ்ரீ அவிநாசிலிங்கத்தைப் பாராட்டுகிறோம்.

## அடி எத்தனை ?

சினிமாக்களின் நீளம் மிக அதிகமாயிருப்பதால் தேசம் பொருள் நஷ்டம் அடைகிறது என்றும் ஜனங்களின் சுகாதாரம் கெடுகிறது என்றும் நெடுங்காலமாகச் சொல்லப்பட்டு வருகிறது. இது காரணமாக, யுத்தகாலத்தில் செய்தது போல் சினிமாக்களின் நீளத்தை 11,000 அடியாக நிர்ணயிக்க வேண்டுமென்று யோசனை கூறப்பட்டது. இந்த யோசனையை வடநாட்டிலுள்ள சினிமா உற்பத்தியாளர்களே ஆதரிக்கத் தொடங்கியிருக்கிறார்கள். ஆனால் தமிழ்ப்பட முதலாளிகள் மட்டும் நீளக் கட்டுப்பாட்டை எதிர்த்து வந்தார்கள். நம் கல்வி மந்திரி இது சம்பந்தமாக உத்தரவு ஒன்று போட்டிருப்பது அறிந்து மகிழ்ச்சியடைகிறோம். முழு நீளப் படம் 13,000 அடிக்குமேல் போகக்கூடாது என்றும், அத்துடன் இரண்டாயிரம் அடி நீளக் கல்விப் படங்கள் காட்ட வேண்டும் என்றும் உத்தரவு போட்டிருப்பதாகத் தெரிகிறது. இது ஒரு மாதிரி சமரசப்படுத்தும் உத்தரவேயாகும். முழு நீளப்படம் 11,000 அடி என்றும், மேலே மூவாயிரம் அடி செய்திப் படமும் கல்விப் படமும் காட்ட வேண்டும் என்றும் முடிவு செய்திருந்தால் உத்தமமாயிருந்திருக்கும். எனினும், இந்த மட்டும் 13,000 அடி என்று தீர்மானம் செய்ததே ஒரு பெரிய முன்னேற்றம் என்பதில் சந்தேகமில்லை. இருபதினாயிரம் அடிப் படத்தின் சித்திரவதையைக் காட்டிலும் 13,000 அடி எவ்வளவோ அபிவிருத்திதானே? இதற்காகவும் கல்வி மந்திரி ஸ்ரீ அவிநாசிலிங்கம் அவர்களைப் பாராட்ட நாம் கடமைப் பட்டிருக்கிறோம்.

## மோசமான பதில்

சென்னைச் சட்டசபையில் மந்திரிமார்கள் கூறியுள்ள பதில்களுக்குள் மிகவும் மோசமான பதிலைச் சென்ற வாரத்தில் மந்திரி கோபால ரெட்டி கூறினார். சர்க்கார் பஸ் கட்டணத்தை உயர்த்தியதைப் பற்றிக் கேட்டதற்கு, "வரியை உயர்த்தினால் ஜனங்கள் அப்படித்தான் ஆட்சேபிப்பார்கள்!" என்று அவர் ஒரே போடாகப் போட்டார். ஸ்ரீ கோபால

ரெட்டியின் புண்ணியத்தில் பஸ் கட்டணம் சர்க்கார் வரியாக மாறிவிட்டதென்றே வைத்துக் கொள்வோம். சர்க்கார் புது வரி போடுவதோ, உள்ள வரியை உயர்த்துவதோ, தாங்கக்கூடியவைகளாகப் பார்த்துச் செய்ய வேண்டும். ஸ்ரீ கோபால ரெட்டி பெரிய நிலச்சுவான்தார். அவர் கொடுக்கும் நிலவரியைத் திடீரென்று 100க்கு 50 விதம் உயர்த்தினால் ஆட்சேபியாமல் இருப்பாரா? மூன்றணா பஸ் வரியை நாலரை அணாவாக உயர்த்தியது பெரிய அக்கிரமம். இந்த அநியாய வரி உயர்வு யாரைப் பாதிக்கிறது? மாதம் ஐம்பது ரூபாய் முதல் நூறு ரூபாய் வரையில் சம்பாதிக்கும் ஏழைப் படித்த வகுப்பாரைப் பாதிக்கிறது. காங்கிரஸ் கூட்டம் போடும்போதெல்லாம் வந்து ஜே போட்டவர்கள் இவர்கள். தேசத் தலைவர்களுடைய விஜயத்தின் போதெல்லாம் கூட்டத்தில் வந்து நிறைந்தவர்கள் இவர்கள். கஷ்டத்தோடு கஷ்டமாகக் கதர் வாங்கிக் கட்டியவர்கள் இவர்கள். திலகர் நிதி, காந்தி நிதி, கஸ்தூரிபாய் நிதி, — எல்லாவற்றுக்கும் தவறாது கொடுத்தவர்கள் இவர்கள். மஞ்சள் பெட்டியில் வோட்டுப் போட்டவர்கள் இவர்கள். இன்றைய தினம் விலைவாசி ஏற்றத்தினால் மிகவும் கஷ்டப்படுகிறவர்களும் இவர்கள். இப்படிப் பட்டவர்கள் தலையில் திடீரென்று மாதம் ஆறு ரூபாய் அதிகச் செலவைச் சுமத்திவிட்டு ஸ்ரீ கோபால ரெட்டி அதைப்பற்றி அலட்சியமாகவும் பேசுகிறார். 'ஏழை அழுத கண்ணீர் கூரிய வாள் ஒக்கும்' என்பதை அவருக்கு ஞாபகமூட்டுகிறோம்.

# 'கல்கி'க்குத் தடை

திருவானைக்காவல்
1—12—48

'கல்கி' ஆசிரியர் அவர்களுக்கு,

"கல்கி" பத்திரிகையை பிரெஞ்சிந்திய சர்க்கார் பிரெஞ்சிந்திய பிரதேசத்திற்குள் தடை செய்துவிட்டனர் என்ற செய்தியைக் கேட்டுத் தூக்கிவாரிப் போட்டது. சென்ற நவம்பர் 14-ம் தேதி 'கல்கி'யில் நாங்கள் எழுதியிருப்பது போன்றே, "சுடச் சுடப் பாலின் திறமோ, சுவையோ குறைவதில்லை. சுடச் சுடச் சுருள் தங்கத்தின் மாற்று அதிகமாகுமேயன்றிக் குறைவதில்லை." அது போல் பிற்போக்காளரின் அவதூறும் அதிகார தேவதைகளின் ஆர்ப்பாட்டங்களும் 'கல்கி'யின் பெருமையை இம்மியளவும் குறைக்க முடியவில்லை. அதற்கு மாறாக 'கல்கி'யின் பெருமை முன்னிலும் பன்மடங்கு அதிகமாகப் பரவி வியாபித்திருக்கிறது.

ர. சீனிவாசன்

*** *** ***

சேலம் டவுன்
1—12—48

'கல்கி' ஆசிரியர் அவர்களுக்கு,

பிரெஞ்சு இந்தியப் பிரதேசத்திற்குள் 'கல்கி' வரக்கூடாது என்று பிரெஞ்சு இந்திய சர்க்கார் ஒரு தடை உத்தரவு பிறப்பித்திருக்கிறது என்று டிசம்பர் 1-ந் தேதியில் வெளியான பத்திரிகையில் பார்த்தேன். அங்கு நடக்கும் ஊழல்களையும் 'குபேர செட்டியின்' குட்டையும் வெளியிட்டால், தடை உத்தரவு போடாமல் வேறு என்ன செய்வார்கள், பாவம்!

'கல்கி' பத்திரிகையைப் படித்துத்தான் புதுச்சேரி மக்கள் கண் விழித்து, பிரெஞ்சு அரசாங்கத்தை ஆகாயத்தில் பட்டமாகப் பறக்க விட்டுவிடுவார்கள் என்ற பயமா? 'கல்கி' பத்திரிகையைப் புதுச்சேரி மக்கள் படிப்பதனால் என்ன தீங்கைக் கண்டுவிட்டார்கள் பிரெஞ்சு அரசாங்கத்தார்?

"பிரெஞ்சு இந்தியாவுக்கு எதிர்காலத்தில் ஒரே வழிதான் உண்டு. இந்தியாவுடன் ஐக்கியம் அடைவதுதான் அந்த வழி" என்று சந்தேகத்திற்கு இடமின்றி நமது தலைவர் நேருஜி கூறியிருக்கும்பொழுதும், இந்தத் தடை உத்தரவுகளும், அடக்கு முறைகளும் அதிகரிக்கின்றன. என்ன மதியீனம்!

கே. ரவீந்திரன்.

*** *** ***

புதுச்சேரி
1—12—48

'கல்கி' ஆசிரியர் அவர்களுக்கு,

பிரெஞ்சு சர்க்கார் அதிகாரிகள் தான் 'கல்கி'க்கு பிரெஞ்சிந்தியாவில் தடையுத்தரவு போட்டிருக்கிறார்கள். இந்தத் தடை 'கல்கி' அன்பர்களுக்கு எத்தனை கஷ்டத்தைத் தந்திருக்கிறது என்பதைத் தெரிவிப்பதற்காகவே இந்தக் கடிதத்தைத் தங்களுக்கு எழுதுகிறேன். ஏழு, எட்டு வருடங்களாகத் தொடர்ந்து வாசித்த பத்திரிகை — மனதைக் கவர்ந்து மகிழ்ச்சி அளிக்கும் பத்திரிகை. இந்த வாரத்தில் நமக்குக் கிடைக்காது என்று எண்ணும்போது மனதை என்னவோ செய்கிறது!

இப்படிப்பட்ட காரியங்களால் சரித்திரத்தின் போக்கை மாற்றி அமைத்து, முப்பது கோடி மக்களாகிய தங்கள் சகோதரர்களிடமிருந்து மூன்று லட்சம் மக்களைப் பிரித்து 'வாழ'ச் செய்ய முடியும் என்று நினைக்குமளவுக்கு பிரெஞ்சு அதிகாரிகளின் அறிவு (?) மங்கிவிட்டதை நினைக்கப் பரிதாபமாகத்தான் இருக்கிறது!

தமிழ் படிக்கத் தெரியாதவர்களும் கூட இப்போது 'கல்கி'யை விரும்பி, அதை வாசித்தவர்களிடமிருந்து விஷயங்களை அறிந்து கொள்ளத் துடிக்கிறார்கள்.'

சாம்பசிவம்




2

சர்க்கார் பஸ்கள் ஓட ஆரம்பித்தன.... சில காலத்துக்கெல்லாம் ரிப்பேர் ஆகி ஷெட்டுகளில் தூங்கவும் ஆரம்பித்தன!

3

இப்போது பஸ் கட்டணத்தை அதிகப்படுத்திவிட்டு "அப்படித்தான் உயர்த்துவோம்; யாரும் எதிர்த்துப் பேசக்கூடாது! ஜாக்கிரதை!" என்று கனம் கோபால் ரெட்டியார் பயமுறுத்துகிறார்.

# "கல்யாணம் ஆகிவிட்டதா?"

"உமக்குக் கல்யாணம் ஆகி விட்டதா?"

"கல்யாணம் ஆன பிறகு நீர் பத்து வருஷகாலமாவது தம்பதி சமேதராக இங்கேயே வசித்தவர் என்பதை நிரூபிக்க முடியுமா?"

"உமது பாட்டன், முப்பாட்டன் எங்கே, எப்போது பிறந்தார்கள்?"

"உமக்கு ஜீவனத்துக்குப் போதிய வருமானம் கிடைக்கிறதா?"

"'ஆம்' என்று தலையை ஆட்டி விட்டால் போதாது. போதிய வருமானம் எது என்பதை நிர்ணயிக்க வேண்டியவர்கள் நாங்கள்தான், தெரியுமா?"

"உமக்கு இந்தத் தேசத்தில் நிரந்தரமாக வசிக்கும் உத்தேசம் உண்டா?"

"'உண்டு' என்கிறீரா? சரி, 'இல்லை' என்று நாங்கள் கூறுகிறோம்' இதற்கு என்ன பதில் சொல்லுகிறீர்?"

"விரும்புவதால் பலனில்லை. 'உண்டு' என்றால் அதை தஸ்தாவேஜுகளின் மூலம் உறுதிப்படுத்த முடியுமா? அல்லது 'உண்டு' என்பதற்கு நாங்கள் நம்பத் தகுந்த எத்தனை சாட்சிகளை உம்மால் கொண்டுவர முடியும்?"

"உமக்கு இந்தத் தேசத்தில் சாசுவதமாக வசிக்கும் எண்ணம் உண்டு என்பதை தஸ்தாவேஜுகளைக் கொண்டும் சாட்சிகளைக் கொண்டும் நீர் சந்தேகத்துக்கு இடமின்றி நிரூபித்தாலும், அவ்விஷயமாக எங்கள் இஷ்டப்படி முடிவு செய்யும் உரிமையை மறுக்க நீர் யார்?"

* * *

இவையெல்லாம் வெறும் கற்பனைக் கேள்விகள் அல்ல.

யாரோ ஓர் அனுமதேயப் பேர்வழி வேறொரு அனுமதேய நபரைப் பார்த்துக் கேட்ட கேள்விகளும் அல்ல.

இலங்கை சர்க்கார் அங்குள்ள ஏழை இந்தியத் தொழிலாளரைப் பார்த்துக் கேட்டுள்ள (அவலட்சணமான) கேள்விகள் இந்த ரீதியில் இருக்கின்றன.

இந்தக் கேள்விகள் பார்லிமெண்டு சபைகளையெல்லாம் தாண்டி சட்டரூபமாகி இருக்கிறது.

முன்னர் இராவணனைக் கண்டு சீதை எவ்வாறு நடுங்கினாளோ, அது போலவே இப்போது மேற்படி சட்டத்தைக் கண்டு இலங்கை இந்தியர்கள் நடுங்க ஆரம்பித்திருக்கிறார்கள்.

அந்தச் சட்டத்தின் கோர ரூபத்தை மாற்ற இந்திய சர்க்கார் எவ்வளவோ பாடுபட்டனர்.

அவ்விஷயமாக நமது பிரதம மந்திரி பண்டித ஜவாஹர்லால் நேருவுக்கும் இலங்கைப் பிரதமர் டாக்டர் சேனநாயகாவுக்கும் பேச்சு வார்த்தைகள் நடந்தன. பின்னர் நீண்ட கடிதப் போக்குவரத்தும் நடந்தது.

இலங்கையிலுள்ள இந்தியத் தொழிலாளர்களுக்கு விசேஷச் சலுகைகள் எதுவும் காட்ட வேண்டாம் என்றும், ஆனால், சாதாரண மனித உரிமைகளை மாத்திரம் அளிக்க மறுக்காமல் இருக்கும்படியும் இலங்கைப் பார்லிமெண்டில் பலர் மன்றாடினர். இந்திய சர்க்காரும் அவ்விதமேதான் கோரினர்.

ஆனால், இறுதியில் பலன் என்ன?

மனித உரிமையாவது மண்ணாங்கட்டியாவது என்ற தோரணையில் இலங்கை சர்க்கார் பதில் அளித்து விட்டார்கள்!

* * *

நேருஜி—சேனநாயகா கடிதப் போக்குவரத்து விவரங்கள் பத்திரிகைகளில் வெளியாகியிருக்கின்றன.

ஏற்கெனவே இலங்கைப் பார்லிமெண்டில் பேசிய மந்திரிகள் இலங்கையிலிருந்து இந்தியர்களை விரட்டுவதே தங்களுடைய நோக்கம் என்பதைப் பகிரங்கப்படுத்தியிருப்பதால், மேற்படி கடிதப் போக்குவரத்து விவரங்கள் யாருக்கும் அதிசய நிலைப்பை உண்டு பண்ணுவதற்கில்லை.

"இலங்கையிலுள்ள இந்தியத் தொழிலாளர்கள் விஷயமாக இந்திய சர்க்கார் பேரம் பேச விரும்பவில்லை. இலங்கையின் இன்றைய செழுமைக்குக் காரணஸ்தர்களான லக்ஷக்கணக்கானவர்களடங்கிய ஒரு கோஷ்டியினருக்கு நீதி கிடைக்கும்படி செய்ய வேண்டியது இந்திய—இலங்கை சர்க்கார்களின் கடமையாகும்.

இலங்கைக்குச் சென்ற இந்தியத் தொழிலாளர்கள் தற்காலிகமாக ஊழியம் செய்வதற்காகச் சென்றவர்கள் அல்ல. அவ்வாறு செல்லும் தொழிலாளர்களை எல்லா விதத்திலும் இலங்கையர்களுக்குச் சமமாக நடத்த வேண்டும் என்பது முக்கியமான நிபந்தனைகளில் ஒன்றாகும்.

தங்களுடைய விருப்பத்திற்கு இணங்க வேண்டும் என்பதற்காகவே இலங்கை இந்தியர்கள் பிரஜா உரிமை பெறுவதற்குத் தகுதியாகும் கால அளவை எட்டு வருடமாக உயர்த்துவதற்கு நான் இசைந்துள்ளேன்.”

நேருஜி டாக்டர் சேனநாயகாவுக்கு எழுதிய கடிதங்களின் சாரம் அதுதான்.

அவற்றிற்கு இலங்கைப் பிரதமர் அளித்த பதிலைக் குறித்து வியாக்கியானம் எதுவும் தேவையில்லை.

ஏனெனில், இலங்கை சர்க்காரின் போக்கு அநீதியானது, நேர்மையற்றது என்பதை மேற்படி பதிலைக் காட்டிலும் தெளிவாகப் பிரகடனப் படுத்தக் கூடியது வேறு எதுவும் இருக்க முடியாது.

“இலங்கையில் நிரந்தரமாக வசிக்கவேண்டும் என்ற உத்தேசத்துடன் இந்தியத் தொழிலாளர்கள் இங்கு வரவில்லை. காப்பி, தேயிலைத் தோட்ட முதலாளிகள் பெருந்தன்மையுடன் அளித்த ஊதியத்தைக் கொண்டு ஜீவனம் நடத்தவே அவர்கள் இங்கு வந்தனர். இலங்கையிலுள்ள இந்தியர்கள் இடைவிடாது இலங்கை சர்க்காரைக் கண்டித்து அவர்கள் மீது தப்பெண்ணம் ஏற்படும்படி செய்து வருகிறார்கள். எனவே, இந்தியர்கள் இலங்கையில் பிரஜா உரிமை பெறும் விஷயமாகத் தாங்கள் கூறியுள்ள யோசனைகளை அப்படியே ஏற்க முடியாததற்காக வருந்துகிறேன்.”

டாக்டர் சேனநாயகா எழுதிய கடிதங்களின் சாரம் அதுதான்.

இலங்கைப் பிரதமர் தென்னாப்பிரிக்கா பிரதம மந்திரி டாக்டர் மலானின் அடிச் சுவடுகளைப் பின்பற்ற முற்பட்டிருக்கிறாரோ என்று நினைக்கவேண்டியிருக்கிறது.

தென்னாப்பிரிக்கா இந்தியர்களுக்கு மனித உரிமைகளை வழங்க மறுக்கும் டாக்டர் மலான், அவர்கள் தென்னாப்பிரிக்க சர்க்காரைக் கண்டித்து இடைவிடாது பிரசாரம் செய்து வருவதாகப் புகார் கூறுகிறார்.

இந்தியர்களுக்கு நியாயமான உரிமைகளை வழங்க மறுக்கும் சர்க்காரை அவர்கள் எவ்வாறு கண்டிக்காமல் இருக்க முடியும் என்பதை டாக்டர் மலானோ அல்லது டாக்டர் சேனநாயகாவோ அறிந்து கொள்ளாதது ஆச்சரியமாக இருக்கிறது.

* * *

இந்தியாவின் கண்டனத்தையோ, லட்சக்கணக்கான இலங்கை இந்தியத் தொழிலாளர்களின் கண்டனத்தையோ சிறிதளவும் லட்சியம் செய்யாமல் இலங்கை சர்க்கார் அநீதியான பிரஜா உரிமை (மறுப்பு) மசோதாவை அமுலாக்கக் கொண்டுவரத் தீர்மானித்து விட்டார்கள்.

இலங்கையின் செழுமைக்காகப் பல பல வருஷங்களாய் நெற்றி வியர்வை நிலத்தில் விழ உழைத்தவர்களுக்குப் பிரஜா உரிமையை மறுக்க இலங்கை சர்க்கார் முற்பட்டிருக்கிறார்கள் என்று ஏற்படுகிறது.

இலங்கையில் பிரஜா உரிமை என்பது மனுஷ நீதியை, ஜனநாயக நியதியை அடிப்படையாகக் கொண்டிருக்கவில்லை என்பதையும், இலங்கை சர்க்காரின் இஷ்டத்தைப் பொறுத்த விஷயம் என்பதையும் மேற்படி சட்டம் தெளிவாக்கியிருக்கிறது.

இலங்கையின் முன்னேற்றத்துக்காக இந்தியத் தொழிலாளர்கள் எவ்வளவு தியாகம் செய்திருக்கிறார்கள் என்பதை இலங்கை சர்க்காரின் பழைய அறிக்கைகளே கதை கதையாகச் சொல்லும்.

அப்படியிருக்க, மேற்படி தொழிலாளர்களுக்குச் சுதந்திர இலங்கை சர்க்கார் நீதி வழங்க மறுப்பது நன்றி கெட்ட செய்கை என்பதுடன், அது ராஜதந்திரமுமாகாது.

தொன்று தொட்டுப் பலவிதத்திலும் இந்தியாவுடன் தொடர்பு கொண்டுள்ள இலங்கை, இந்தியாவை விரோதித்துக் கொள்வது புத்திசாலித்தனமாகுமா என்பதை இலங்கைத் தலைவர்கள் உன்னிப்பார்க்க வேண்டும்.

எட்டுலட்சம் இந்தியர்களுக்கு அநீதி இழைக்கும் இலங்கை சர்க்காரின் போக்கை இந்தியா எக்காலத்திலும் மறக்காது.

இந்தியாவின் நட்பையும் தொடர்பையும் இழக்காமல் இருப்பதற்காக பிரிட்டன், சமீபத்தில் நடந்த காமன்வெல்த் மகாநாட்டில் எவ்வளவு தூரம் பெரு முயற்சி செய்தது என்பதை இலங்கைத் தலைவர்கள் உணர்ந்து, இந்தியா—இலங்கையின் நட்புக்கும் நல்லெண்ணத்துக்கும் பங்கம் ஏற்படாமலிருக்க இப்போதாவது முயற்சிப்பார்களாக.

# அரிசி விஷயம்

**எம். எல். எஸ்.**

"அரிசி ரேஷன் இன்னும் எவ்வளவு காலம் இருக்குமோ?" என்று கேட்டார் ஸ்ரீமான் கால்பட்டினி ஒரு பசி ஏப்பம் விட்டுக்கொண்டே.

"குறைந்தது இன்னும் மூன்று வருஷமாவது இருக்கும் போலத் தோன்றுகிறது" என்றார் ஸ்ரீமான் அரைப்பட்டினி சென்னை சட்டசபை நடவடிக்கைகளைப் படித்துவிட்டு.

"அப்புறம் கண்ட்ரோலை எடுத்து விடுவார்களோ?"

"கண்ட்ரோலை எடுத்துவிடுவார்கள்; ஆனால் அரிசிதான் இருக்காது!"

சென்னை சர்க்கார் உணவு உற்பத்தியைப் பெருக்குவதற்காகச் செய்யும் முயற்சியைப் பார்க்கும்போது, ஸ்ரீமான் அரைப்பட்டினியின் தீர்க்கதரிசனம் பலித்துவிடுமோ என்று பயப்படும்படியாகத்தான் இருக்கிறது.

* * *

"உணவு ரேஷன் முழுவதையும் அரிசியாகத்தான் கொடுக்க வேண்டும் என்றால், அது எப்படிக் கொடுக்க முடியும்? அரிசியுடன் கொடுக்கப்படும் மற்றப் பொருள்களையும் சாப்பிட்டுப் பழக்கப் படுத்திக் கொள்ள வேண்டும்" என்கிறார் உணவு மந்திரி.

நியாயந்தான்.

மதுரையிலிருந்து வந்திருக்கும் ஒரு செய்தியை உணவு மந்திரி பார்த்திருப்பாரோ என்னவோ? அங்கே ஒரு அரிசி மூட்டையைப் பிரித்துப் பார்த்தபோது, அதில் ஒரு பெரிய ஓடும் ஒரு பெரிய கல்லும் இருந்தனவாம்!

அரிசியுடன் கொடுக்கப்படும் ஓட்டையும் கல்லையும் கூடச் சாப்பிட்டுப் பழக்கப் படுத்திக்கொள்ள வேண்டுமா என்ன என்பது தெரியவில்லை.

* * *

யாராவது பணத்தை வீணாக்கி விட்டாலோ, அல்லது லாபம் கிடைக்கும் என்று நினைத்து ஏதாவது ஒரு துறையில் பணத்தைப் போட்டு விட்டு அப்புறம் கஷ்டமடைந்தாலோ, "அவன் பாழுங் கிணற்றில் பணத்தைப் போட்டு விட்டான்" என்று சொல்லுவதுண்டு.

இனிமேல் "பாழுங் கிணற்றில் பணத்தைப் போட்டு விட்டான்" என்று சொல்வதை விட, "சர்க்கார் கிணற்றில் பணத்தைப் போட்டு விட்டான்" என்று சொல்லுவது பொருத்தமாக இருக்கும்.

ஒரு விவசாயி சொல்லுகிறார்:— "எங்கள் ஊரில் ஒரு கிணறு வெட்டினார்கள். 60 அடி 70 அடி ஆழம் வெட்டியும் கூடத் தண்ணீரே வரவில்லை. அப்புறம் வந்தது! என்ன? தண்ணீரா? இல்லை, ஒரு பெரிய பாறை!"

* * *

கைத்தொழில் மந்திரி சீதாராம ரெட்டி சென்ற வாரம் சென்னை சட்டசபையில் பேசியதிலிருந்து, இம் மாகாண வாசிகள் ஒவ்வொருவருக்கும் பன்னிரண்டு கெஜம் துணி கொடுக்க சர்க்கார் உத்தேசித்திருப்பதாகத் தெரிகிறது.

உணவு மந்திரி டாக்டர் ராஜன், அடுத்த மார்ச்-ஏப்ரல் மாதத்தில் உணவு ரேஷனைப் பன்னிரண்டு அவுன்ஸாக்கப் போவதாகத் தெரிவித்திருக்கிறார்.

உண்பதற்கும் உடுப்பதற்குமிடையே இனிமேல் ஏற்றத் தாழ்வோ வித்தியாசமோ இராது.

இந்தச் செய்தியைப் பார்த்துவிட்டு, "ஸார், ஸார்! இன்றையப் பத்திரிகையைப் பார்த்தீர்களா?" என்று கேட்டார் ஸ்ரீமான் பொதுஜனம்.

"பார்த்தேன்" என்றேன் நான்.

"பன்னிரண்டு கெஜம் அரிசியும் பன்னிரண்டு அவுன்ஸ் துணியும் கொடுக்கப் போகிறார்களாமே!"

"சென்னை சர்க்கார் அப்படிக் கொடுத்தாலும் அதில் ஆச்சரியப் படுவதற்கு என்ன இருக்கிறது?" என்றேன் நான்.

* * *

ஒரு நாள் நான் என்னுடைய நண்பர் ஒருவருடைய வீட்டுக்குப் போயிருந்தேன். அவர் வெகு கோபத்துடன் தம்முடைய குழந்தையை அடித்துக் கொண்டிருந்தார். அந்தக் குழந்தைக்கு வயது மூன்று அல்லது நான்குதான் இருக்கும். அந்தப் பச்சைக் குழந்தையைப் போட்டு

அப்படி அடிப்பதைப் பார்க்க என் மனம் தாளவில்லை.

"ஸார், ஸார், விட்டுவிடுங்கள், பாவம்!" என்றேன் நான்.

"பாவமா? நன்றாகச் சொன்னீர்கள்! இது பண்ணுகிற அட்டூழியம் கொஞ்சமா நஞ்சமா?" என்றார் அவர் ஆக்ரோஷத்துடன்.

"அப்படி என்ன அட்டூழியம் செய்து விட்டது?" என்று கேட்டேன் நான்.

"விளையாடுகிறது, ஸார்! — ஒரு நிமிஷங் கூடச் சும்மா இருப்பதில்லை—கழுதை!"

"இவ்வளவுதானா? இதற்காகவா குழந்தையை இப்படி அடிக்கிறீர்கள்?" குழந்தைகள் விளையாடுவது உடம்புக்கு நல்லதுதானே!"

"நன்றாகச் சொன்னீர்கள், போங்கள்! —உடம்புக்கு நல்லதாவது ஒன்றாவது!— இந்த ரேஷன் காலத்திலே இப்படி ஓடியாடித் திரிந்துவிட்டு அப்புறம் 'பசியோ பசி' யென்று கத்தினால் சாதம் போடுவது யார் ஸார்? அரிசிக்கு நான் எங்கே போவது?" என்றார் அவர்.

* * *

சென்ற மகா யுத்தம் நடந்துகொண்டிருந்தபோது பிரிட்டனில் நூற்றுக்கு நாற்பது விதம் உணவுப் பொருள் உற்பத்தி அதிகமாக்கப்பட்டது; அமெரிக்காவில் நூற்றுக்கு முப்பது விதம் உற்பத்தி அதிகமாக்கப்பட்டது. நம்முடைய சென்னை மாகாண சர்க்காரும் அதிகமாக்கிக் கொண்டுதான் வருகிறார்கள்.

உற்பத்தியை அல்ல; விலையை! ஒரு படி அரிசியின் விலை 0-1-4 அதிகமாக்கப் பட்டிருக்கிறது. ஏதாவது அதிகமானால் சரிதானே?






பாரதத் தாயின் அருமைப் புதல்விகள் இவர்கள். இன்றைக்குப் புத்தகமும் கையுமாகப் பள்ளிக்கூடம் செல்கிறார்கள். நாளைக்குத் தக்க கணவர்களை மணந்து கிரகலக்ஷ்மிகளாக விளங்குவார்கள்; வீரப் புதல்வர்களையும் கற்புக்கரசிகளையும் பெற்றெடுப்பார்கள்; அவர்களை நல்ல முறையில் வளர்த்து சுதந்திர பாரத நாட்டுக்குப் பெருமையும் புகழும் அளிப்பார்கள். இன்று குழந்தைகளாயிருக்கும் பெண்கள் நல்ல முறையில் கல்வி பெறுவதற்குச் செய்யும் உதவி பாரதத் தாய்க்குச் செய்யும் சிறந்த கைங்கரியமாகும். பாரதநாடு வருங்காலத்தில் மகோந்நதம் அடைவதற்குச் செய்யும் உத்தமத் திருப்பணியாகும்.

திருவல்லிக்கேணியில் தேசியப் பெண்கள் பள்ளிக்கூடம் ஒன்று மிக நல்ல முறையில் நடந்து வருகிறது. சுமார் ஆயிரம் பெண் குழந்தைகள் கல்விப் பயிற்சி பெற்று வருகிறார்கள், புத்தகப் படிப்பு மட்டுமல்லாமல் பிற்காலத்தில் வாழ்க்கையில் பயன்படக் கூடிய பலவகைப் பயிற்சிகளும் பெற்று வருகிறார்கள்.

இந்த ஆயிரம் பெண் குழந்தைகளும் படிப்பதற்கு வசதியான நல்ல கட்டிடம் கிடையாது. இருளடைந்த குகை போன்ற அறைகள் உள்ள பழைய கட்டிடம் ஒன்றில், பாவம், அவர்கள் தினம் தினம் அடைபட்டுக் கிடந்தார்கள்.

அந்தக் குறை நீங்கும் காலம் வந்தது. கட்டிடம் கட்டப் பூமி கிடைத்தது. அஸ்திவார விழா நடந்து கட்டிடமும் தொடங்கப்பட்டது. ஆனால், கட்டிடம் இன்னும் பூர்த்தியாகவில்லை. பணம் போதாமல் பாதியில் நின்று போயிருக்கிறது.

தொடங்கிய கட்டிட வேலையைப் பூர்த்தி செய்வதற்கு நிதி சேர்ப்பதற்காக டிசம்பர் மாதம் ஐந்தாம் தேதி ஞாயிற்றுக்கிழமை யன்று மாலை ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மியின் கைங்கரியக் கச்சேரி சென்னை ராஜாஜி மண்டபத்தில் நடைபெறுகிறது.

கச்சேரிக்கு டிக்கட் வாங்கிக் கொண்டோ, அல்லது நன்கொடைகள் அளித்தோ, இந்தச் சிறந்த கல்வித் திருப்பணிக்கு உதவி செய்யும்படி கோருகிறோம். நீங்கள் செய்யும் உதவிக்குப் பிரதியாக இன்றைக்கு ஆயிரம் பெண் குழந்தைகளின் வாழ்த்துக்களைப் பெறுவீர்கள். வருங்காலத்தில் படிக்கப் போகும் ஆயிரமாயிரம் பெண் குழந்தைகளின் நன்றிக்கும் பாத்திரமாவீர்கள்.




"பப்-பப்-பபபப்!" என்று பெருமூச்சு விட்டுவிட்டு, "ஜே ஹிந்த்" என்று கோஷ மிட்ட ஆசாமி யாராக இருக்கலாமென்று திரும்பிப் பார்த்தேன்.

எம்- எஸ் ரயில் என்ஜின் ஒன்று வந்து பின்னால் நின்று கொண்டிருந்தது. "எப்-எப்-எப்-எபெபெப்!" என்று இன்னொரு பெருமூச்சு விட்டுவிட்டு, "ஆசிரியரே! சுகமா?" என்றது.

"அவ்வளவு மோசமில்லை; உம்முடைய கரிப் புகை மூக்கில் ஏறாதவரையில் ஒரு மாதிரி சுகந்தான். அவ்விடத்தில் எல்லோரும் சௌக்யந்தானே?" என்றேன்.

"அதுதான் இல்லை! சௌக்யமும் இல்லை; சாந்தமும் இல்லை. எல்லாம் தலைகீழ்ப் பாடம்; எல்லாம் குட்டிச் சுவர்; எல்லாம் சர்வமோசம். இந்த உலகத்தில் என் உயிர் வாழ்கிறோம் என்று மனம் வேதனைப் பட்டுக்கொண் டிருக்கிறது ......... ஆசிரியரே! இந்த கே. சந்தானம் என்கிறது யார்?" என்று ரயில் என்ஜின் கேட்டது.

என்ஜினுடைய மனக் கிலேசத்தின் காரணத்தை ஒருவாறு தெரிந்து கொண்டேன். "எதற்காகக் கேட்கிறாய்? அவர் மேல் உனக்கு ஏதாவது புகார் உண்டா?" என்று கேட்டேன்.

"புகாருக்கு என்ன குறைச்சல்? ஏராளமாய் உண்டு. அந்த மனுஷர் ரயில்வே மந்திரியாக வந்து செய்கிற அட்டகாசம் கொஞ்ச நஞ்சமல்ல. ரயில்களிலே இனிமேல் 'ஒன்றாம் கிளாஸ்' கிடையாதாம்! இதைவிட அக்கிரமம் வேறு உண்டா?"

"ஓ என்ஜினே! ரயில் வண்டிகளில் முதல் வகுப்பை எடுத்து விடுவது பற்றி சர்க்கார் செலவில் சும்மாக் காலை நீட்டிப் போட்டுக் கொண்டு பிரயாணம் செய்யும் பெரிய பெரிய உத்தியோகஸ்தர்களும் கமிஷன்களும் கமிட்டிகளும் புகார் செய்தால் அதில் அர்த்தம் உண்டு. நீ எதற்காகப் புகார் செய்கிறாய்?" என்றேன்.

"உமக்குத் தெரிந்த இலட்சணம் அவ்வளவுதான். ஒன்றாம் கிளாஸ் வண்டி இருந்தால், அதனுடைய மதிப்பு வேறு எதற்கு உண்டு? சிலோன் போட் மெயிலில் முப்பது வண்டியை நான் இழுக்க வேண்டியிருந்தால், அதில் பத்து முதல் வகுப்பு வண்டி காலியாகவே வரும். எங்கேயாவது எனக்குக் கொஞ்சம் சிரமமாயிருந்தால் வழியில் வண்டியை நிறுத்திவிட்டு ஒன்றாம் கிளாஸ் வண்டி ஒன்றில் ஏறிச் சிறிது நேரம் படுத்து இளைப்பாறுவேன். இனிமேல் அப்படி முடியுமா? இனிமேல் எனக்குக் களைப்பாக இருந்தால் ரயில் தண்டவாளத்திலேயே படுத்துக்கொண்டு தூங்க வேண்டியதுதான். ஆசிரியரே! இவர் யார் இந்த கே. சந்தானம்? இத்தனை காலமாக இல்லாத சீர்திருத்தங்களையெல்லாம் இவரை யார் செய்யச் சொன்னார்கள்? வாரா வாரம் பத்திரிகைக்காரர்களைக் கூப்பிட்டு ரயில்வே சீர்திருத்தங்களைப் பற்றிப் பேசுகிறாராமே? —முதல் வகுப்பு பெஞ்சி மெத்தைகளையெல்லாம் வாளைப் போட்டு அறுத்து இண்டர் வகுப்பாகச் செய்ய உத்தரவு போட்டுவிட்டாராமே? இந்த அக்கிரமத்தை நீர் கேட்டீரா?— இதற்கெல்லாம் காரணம் இந்த கே. சந்தானந்தான் என்று சொல்கிறார்களே? — இன்னும் கொஞ்ச நாள் போனால் ரயிலிலே மூட்டைப் பூச்சி ஏறக் கூடாது என்றுகூட உத்தரவு போட்டுவிடுவார் போலிருக்கிறதே?—இவர் யார் இந்த கே. சந்தானம்? — கிராண்ட் டிரங்க் எக்ஸ்பிரஸ் சென்னையிலிருந்து டெல்லி போகும் நேரத்தில் நாலு மணி நேரம்

துறைத்து விட்டாரே? இன்னும் என்னென்ன செய்யப் போகிறாரோ, தெரியவில்லையே? எப் எப் எப் பெப்பெப்!" என்று என்ஜின் ஓசை அலறலாக அலறியது.

* * *

இதே மாதிரி, "யார் இந்த கே. சந்தானம்?" என்னும் கேள்வி, 1923-ம் வருஷத்தில் ஒரு சமயம் எழுந்தது. அந்த வருஷத்தில் டெல்லியில் நடந்த ஸ்பெஷல் காங்கிரஸ் முடிந்த உடனே பண்டித ஜவாஹர்லால் நேரு, ஸ்ரீ கே. சந்தானம், ஸ்ரீ ஏ. டி. கித்வானி ஆகிய மூவர் நாபா சமஸ்தானத்துக்குப் போனார்கள். அங்கே நாபா போலீசார் அவர்களைக் கைது செய்து சிறையிலே அடைத்தார்கள். இந்தச் சம்பவத்தைக் குறித்துப் பண்டித ஜவாஹர்லால் நேருவின் சுயசரிதம் பதினொராம் அத்தியாயத்தில் எழுதியிருப்பதைக் கேளுங்கள்:—

"டில்லி ஸ்பெஷல் காங்கிரஸ் ஆனவுடனே சற்றும் எதிர்பாராத அதிசயமான அநுபவம் ஒன்று எனக்குக் கிடைத்தது. அப்போது பஞ்சாபில் சீக்கியர்கள் சர்க்காருடன் நீடித்த போராட்டத்தில் இறங்கியிருந்தார்கள். சீக்கியர்களின் ஆலயங்களுக்குக் குருத்வாராக்கள் என்று பெயர். இந்தக் குருத்வாராக்கள் மகந்துக்களின் ஆதிக்யத்தில் இருந்தன. மகந்துக்கள் ஒழுக்கமில்லாதவர்கள். குருத்வாராக்களின் சொத்துக்களையும் வருமானங்களையும் அவர்கள் துர்வினியோகப் படுத்திக் கொண்டிருந்தார்கள். மகந்துக்களை விரட்டிவிட்டுக் குருத்வாராக்களைக் கைப்பற்றித் தூய்மைப் படுத்துவதற்காக அகாலி சீக்கியர்கள் சத்தியாக்கிரஹப் போராட்டம் ஆரம்பித்திருந்தார்கள். இந்தப் போராட்டத்தில், முக்கியமாகக் 'குருகாபாக்' என்னுமிடத்தில் ஆயிரக்கணக்கான அகாலி சீக்கியர்கள் (மாஜி சிப்பாய்கள் உள்பட) போலீஸாரால் மிருகத்தனமாக அடிக்கப்பட்டார்கள்.

இந்தப் பெரிய போராட்டம் நடந்து கொண்டிருக்கையில் இன்னொரு சின்னப் போராட்டம் நாபா சமஸ்தானத்தில் ஆரம்பமாகியிருந்தது...... நாபா சமஸ்தானத்தைச் சேர்ந்த ஜைதோ என்னுமிடத்தில் சீக்கியருடைய திருவிழா ஒன்று தடுக்கப்பட்டது. சீக்கியர்களுக்கு இது ஆத்திரமூட்டியது. தடுக்கப்பட்ட திருவிழாவை நடத்தி முடிப்பதற்காக சீக்கிய சத்தியாக்கிரஹ கோஷ்டிகள் அனுப்பப்பட்டன. சத்தியாக்கிரஹிகளைப் போலீஸார் அடித்தும் கைது செய்தும் காட்டிலே கொண்டு விட்டும் கொடுமை செய்தது பற்றிய விவரங்களைப் பத்திரிகைகளில் நான் படித்திருந்தேன். டில்லி ஸ்பெஷல் காங்கிரஸ் முடிந்த சமயத்தில், அகாலி சீக்கியர் கோஷ்டி ஒன்று ஜைதோவுக்குப் புறப்படுகிறதென்று தெரிந்தது. நாபாவில் என்ன நடக்கிறது என்பதை நேரில் வந்து பார்க்க வேண்டும் என்று எனக்கு அழைப்பு வந்தது. அழைப்பை உடனே ஒப்புக் கொண்டேன். என்னுடைய காங்கிரஸ் சகாக்கள் இருவர்—ஏ. டி. கித்வானியும் சென்னை கே. சந்தானமும் — என்னுடன் வந்தார்கள். அகாலி கோஷ்டி நடந்து சென்றது. நாங்கள் ரயில் மார்க்கமாக முதலில் போய் நாபா எல்லையில் ஜைதோவுக்கு அருகில் காத்திருப்பது நலம் என்று சொன்னார்கள். அப்படியே நாங்கள் ஜைதோவுக்கு அருகில் உள்ள ரயில்வே ஸ்டேஷன் வரையில் ரயிலில் சென்று அங்கிருந்து கட்டை வண்டியில் ஏறி ஜைதோவுக்குப் போனோம். இதற்குள் சத்தியாக்கிரஹ கோஷ்டியும் வந்து விட்டது. நாங்கள் கொஞ்ச தூரத்தில் அதைத் தொடர்ந்து சென்றோம். ஜைதோ வந்து சேர்ந்ததும் அகாலி கோஷ்டியைப் போலீஸார் தடுத்து நிறுத்தினார்கள். உடனே ஒரு போலீஸ் உத்தியோகஸ்தர் எங்களிடம் வந்து நாபாவின் பிரிட்டிஷ் நிர்வாக அதிகாரி கையெழுத்திட்ட உத்தரவுகளைக் கொடுத்தார். நாபா சமஸ்தானத்தில் நாங்கள் பிரவேசிக்கக் கூடாது என்றும், பிரவேசித்திருந்தால் உடனே போய்விட வேண்டும் என்றும் உத்தரவில் எழுதியிருந்தது. நாங்கள் அகாலி கோஷ்டியைச் சேர்ந்தவர்கள் அல்லவென்றும், என்ன நடக்கிறது என்று பார்ப்பதற்கு வந்தோமென்றும், நாபா சட்டங்களை மீறும் உத்தேசம் எங்களுக்கு இல்லையென்றும் அந்த உத்தியோகஸ்தரிடம் தெரிவித்தோம். நாபா சமஸ்தானத்துக்குள் ஏற்கனவே பிரவேசித்தாகி விட்டதென்றும், அடுத்த ரயில் சில மணி நேரம் கழித்துப் புறப்பட்டுப் போகிறது என்றும், அதற்கு





முன்னால் 'உடனே வெளியேறுவது' முடியாத காரியம் என்றும் சொன்னோம். இதன்மேல் எங்கள் மூவரையும் கைது செய்து 'லாக் - அப்'பில் கொண்டு போய் அடைத்தார்கள். பிறகு அகாலியர் கோஷ்டியை வழக்கப்படி அடித்து இம்சித்ததாக அறிந்தோம்.

பகல் முழுதும் 'லாக் - அப்'பில் அடைக்கப்பட்டிருந்தோம். மாலையில் ஜைதோ ரயில் நிலையத்துக்கு எங்களை அழைத்துச் சென்றார்கள். புறப்படுவதற்கு முன்னால் என்னையும் கே. சந்தானத்தையும் சேர்த்துக் கைவிலங்கு பூட்டினார்கள். அதாவது சந்தானத்தின் இடது கையையும் என்னுடைய வலது கையையும் சேர்த்து விலங்கு மாட்டிப் பூட்டினார்கள். அந்த விலங்கில் ஒரு சங்கிலியைக் கோத்து ஒரு போலீஸ்காரன் அந்தச் சங்கிலியைப் பிடித்துக் கொண்டான். எங்களுக்குப் பின்னால் கித்வானிக்குக் கைவிலங்கு போட்டுச் சங்கிலி கோத்து இன்னொரு போலீஸ்காரன் அவரைப் பிடித்துக் கொண்டான். ஜைதோ பட்டணத்தின் வீதிகளில் இந்த விதமாக நாங்கள் நடத்தி அழைத்துச் செல்லப்பட்டோம். இவ்விதம் 'மார்ச்' செய்கையில், நாயைச் சங்கிலி மாட்டி அழைத்துப்போகும் காட்சி எனக்கு ஞாபகம் வந்தது. அதைப்போலத்தான் இதுவும் என்று தோன்றியது. முதலில் கோபமாயிருந்ததாயினும், விரைவில் இந்தச் சம்பவத்திலுள்ள வேடிக்கையை அனுபவிக்கத் தொடங்கினோம். மொத்தத்தில் அதை ஒரு தமாஷாகவே கருதிக் குதூகலமாக நடந்தோம். ஆனால் அன்று ராத்திரி நடந்த சம்பவங்கள் தமாஷாகவும் இல்லை; குதூகலமும் அளிக்கவில்லை. மெதுவாக ஊர்ந்து செல்லும் ரயிலில், கைவிலங்கு—சங்கிலிகளுடன் பிரயாணம். நடுவழியில் ஒரு ஸ்டேஷனில் வண்டி மாற்றம். பின்னிரவில் நாபா 'லாக்-அப்' ஒன்றில் படுக்கை. மறுநாள் நடுப்பகலில் 'லாக்-அப்'பிலிருந்து அசல் நாபா சிறையில் எங்களைக் கொண்டு போய்ச் சேர்த்தார்கள். அதுவரையில் கைவிலங்கும் கனமான சங்கிலியும் எங்களைப் பிரியவில்லை. நானும் சந்தானமும் ஒருவரிடம் ஒருவர் சொல்லாமல் எதுவும் செய்ய முடியாது. ஒருவரோடொருவர் ஒத்துழைக்காமல் தனியாக உடம்பை அசைக்கக் கூட முடியாது! அத்தகைய பயங்கரமான அநுபவத்தை இன்னொரு தடவை அடைய நான் விரும்பவே இல்லை.........

நாபா சிறையில் சுகாதாரம் சிறிதும் இல்லாத ஒரு சிறு அறையில் நாங்கள் பூட்டி வைக்கப் பட்டிருந்தோம். கீழே தரை ஈரமாயிருந்தது. மேலே கூரை மிகத் தாழ்ந்தது. நிமிர்ந்து நின்றால் தலை இடிக்கும். அந்த வெறும் ஈரத் தரையிலே தான் படுத்துக் கொண்டோம். களைப்பினால் கண்ணயர்ந்து சிறிது தூக்கம் வரும்; சில நேரத்துக் கெல்லாம் திடீரென்று விழிப்பு ஏற்படும். எங்கள் முகத்தின் மேலே எலியோ, பெருச்சாளியோ ஓடுவதை அறிந்து பயங்கர மடைவோம்....."

இவ்விதம் பதினைந்து தினங்கள் ஜவாஹர்லால்ஜியும் கே. சந்தானமும் கித்வானியும் நாபா சிறையில் பயங்கர வாழ்வு நடத்தினார்கள். இவர்கள் எதிர்வழக்கு ஆடாத போதிலும் விசாரணை முடியப் பதினைந்து தினங்கள் ஆயின. விசாரணை முடிவில் ஒவ்வொருவருக்கும் இரண்டரை வருஷம் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது. அன்றைக்கே தண்டனை ரத்து செய்யப்பட்டது.

பண்டித ஜவாஹர்லால்ஜி பின்வருமாறு கதையை முடிக்கிறார்:—"நாபா சிறைச்சாலையிலிருந்து நாங்கள் மூன்று பேரும்,—கித்வானியும் சந்தானமும் நானும்,—ஒரு பயங்கரமான தோழனைக் கொண்டு வந்தோம். அந்தத் தோழன் டைபாய்டு ஜுரந்தான். மூன்று பேருக்கும் டைபாய்டு ஜுரம் வந்துவிட்டது. சில வாரம் நான் படுக்கையில் இருந்தேன். மற்ற இருவரும் என்னைக் காட்டிலும் அதிகக் கடுமையான டைபாய்டு ஜுரத்தினால் பீடிக்கப்பட்டு நெடுங் காலம் படுத்த படுக்கையாயிருந்தார்கள்!"

•  •  •

**ப**ண்டித ஜவாஹர்லால் நேரு, கே. சந்தானம், ஏ. டி. கித்வானி ஆகியவர்கள் நாபாவில் கைது செய்யப்பட்டது பற்றியும் அவர்களுடைய வழக்கு விசாரணை பற்றியும் இந்தியா எங்கும் செய்தி பரவியிருந்ததல்லவா? அப்போது ஒரு தடவை "யார் இந்த கே.

சந்தானம்?" என்ற கேள்வி எழுந்தது. இந்த மாதிரி கேள்வி எழுவதற்குக் காரணம் என்னவென்று இப்போது பார்க்கலாம்.

காங்கிரஸ் மகாசபை நடத்திய தேசிய இயக்கத்தில் இரண்டு கே. சந்தானங்கள் முன்னணியில் நின்று பிரபலம் அடைந்தவர்கள். ஒருவர் லாகூரில் வசித்த பாரிஸ்டர் கே. சந்தானம். 1919-ல் நடந்த ராவ்லட் சத்தியாக்கிரஹ இயக்கத்தின்போது லாலா ஹரிகிஷன்லால், டாக்டர் சத்தியபால், டாக்டர் கிச்லூ இவர்களைப்போல் பஞ்சாபில் பாரிஸ்டர் கே. சந்தானம் பிரபலத் தலைவராக விளங்கினர். பிற்பாடு, லக்ஷ்மி இன்ஷியூரன்ஸ் கம்பெனியை ஆரம்பித்து அதை ஒரு வெற்றிகரமான வர்த்தக ஸ்தாபனமாகச் செய்தார். தற்சமயம் அவரைப் பற்றித் தகவல் ஒன்றும் கிடையாது.

தமிழ்நாட்டில் இன்னொரு கே. சந்தானம் 1921-ல் ஒத்துழையாமை இயக்கத்தில் பிரபலம் அடைந்தார். இவர் தஞ்சாவூர் ஜில்லா மன்னார்குடிக்கு அருகில் கும்மட்டித்திடல் என்னும் கிராமத்தில் பிறந்தவர். சென்னை பிரஸிடென்ஸி கலாசாலையில் எம். ஏ. பட்டம் பெற்று, பிறகு பி. எல். பரீட்சையும் தேறியவர். 1920-ல் சென்னை ஹைகோர்ட்டில் பிராக்டிஸ் செய்ய ஆரம்பித்தார். அவருடைய மதி நுட்பத்தையும் விவாதத் திறமையையும் கண்டறிந்திருந்த அவரது நண்பர்களும் பந்துக்களும் வக்கீல் தொழிலில் அவர் வெற்றியடைந்து, காலஞ்சென்ற வி. பாஷ்யமய்யங்கார், ஸர் வி. கிருஷ்ணசாமி ஐயர், ஸ்ரீ எஸ். சீனிவாசய்யங்கார் முதலியவர்களைப்போல் பிரபலமடைவார் என்ற நம்பிக்கையுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

ஆனால் அவர்களுடைய ஆசையை நிறைவேறாமல் அடிப்பதற்குத் தென்னாப்பிரிக்காவிலிருந்து ஸ்ரீ மோகன்தாஸ் கரம்சந்த் காந்தி என்ற பெயர் தரித்தவர் வந்து சேர்ந்தார். 1920-ம் வருஷத்தில் பஞ்சாப், கிலாபத் அநீதிகளுக்குப் பரிகாரம் தேடவும், இந்தியா சுதந்திரம் அடையவும் ஒத்துழையாமை என்ற இயக்கத்தை ஆரம்பித்தார். சட்ட சபைகளைப் பகிஷ்காரம் செய்ய வேண்டும் என்றும், வக்கீல்கள் தொழிலை நிறுத்த வேண்டும் என்றும், மாணவர்கள் கலாசாலைகளைப் பகிஷ்காரம் செய்ய வேண்டும் என்றும் சொன்னார்.

காந்தி மகானுடைய திட்டத்தில் அந்தக் காலத்தில் அநேகருக்கு நம்பிக்கை ஏற்படவில்லை. "இந்தத் திட்டம் காரியத்தில் எங்கே நடக்கப் போகிறது? காந்தி சொல்கிறபடி யார் கேட்கப் போகிறார்கள்?" என்று ஆங்கிலம் படித்த அரசியல் வாதிகளில் 100-க்கு 99 பேர் நினைத்தார்கள்.

இத்தகைய அவநம்பிக்கை குடிகொண்டிருந்த நிலைமையில் தமிழ்நாட்டில் ஸ்ரீ சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் பெரும் வருவாய் அளித்துக் கொண்டிருந்த வக்கீல் தொழிலை விட்டார். அவர் காட்டிய வழியைப் பின்பற்றி அறிவாளிகளும், அப்போதுதான் 'பிராக்டிஸ்' ஆரம்பித்திருந்தவர்களுமான இளம் பிராயத்து வக்கீல்கள் சிலரும் தொழிலை விட்டார்கள். விட்டுவிட்டு அகில இந்தியாவில் காந்திஜியின் தலைமையையும் சென்னை மாகாணத்தில் ராஜாஜியின் தலைமையையும் ஏற்றுக் கொண்டு தேசியப் போரில் ஈடுபட்டார்கள்.

அவ்வாறு வக்கீல் தொழிலை விட்டு ஒத்துழையாமை இயக்கத்தில் சேர்ந்த இளம் தேசபக்தர்களில் ஸ்ரீ கே. சந்தானம் எம். ஏ., பி. எல். ஒருவராவர்.

* * *

**1921**-ம் வருஷத்தின் மத்தியில் திருச்சிராப்பள்ளியில் நாகபுரி காங்கிரஸ் அமைப்பின்படி ஏற்பட்ட தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி கூடியது. சுமார் நூறு அங்கத்தினர்கள் கூட்டத்துக்கு வந்திருந்தார்கள். அந்தக் கூட்டத்தில் அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டிக்கு அங்கத்தினர் தேர்தல் நடந்தது. இந்தத் தேர்தலுக்கு 'ஓர் மாற்று ஓட்டு முறை' (Single Transferable Vote) அனுசரிக்கப்பட்டு வருகிறது. அப்படியென்றால் என்னவென்று கேட்கிறீர்களா? தயவுசெய்து தெரிந்தவர்களிடம் நேரில் கேட்டுத் தெரிந்து கொள்ளவும். எழுத்தினால் விளக்க முடியாத சிக்கலான விஷயம். 1921-ல் நடந்த கூட்டத்தில் முக்காலே மூன்று வீசம் பேருக்கு அந்த வோட்டு முறையைப் பற்றி ஒன்றும் தெரியாது. தேர்தலுக்கு நின்றவர்கள் பெயர்களை யெல்லாம் ஜாபிதாவில் எழுதிக் கொடுத்து, அவரவர்களுக்கு முதலில் பிடித்தவர்களின் பெயருக்குப் பக்கத்தில் ஒன்று என்றும், அடுத்தபடி பிடித்தவர்களின் பெயருக்கு அருகில் இரண்டு என்றும், இந்த மாதிரி இருபத்தேழு பெயர்கள் வரையில் குறிப்பிட வேண்டும் என்று வோட்டுக் கொடுக்கும் முறை விளக்கப்பட்டது. அந்தப்படியே அங்கத்தினர்கள் வோட்டுக் கொடுத்தார்கள். அப்புறம் வோட்டு எண்ணி, ஜாபித்

தவர்களைக் கண்டுபிடிக்க வேண்டுமோ? இந்த வேலைக்கு ஐந்தாறு பேர் நியமிக்கப் பட்டார்கள். அவர்களில் ஒருவர் மற்றவர்களுக்கு வோட்டு எண்ணிக் கணக்கிடும் முறையை விளக்கிக் கொண்டிருந்தார். 'ஒற்றை மாற்று வோட்டு முறை'யின் சிக்கல்களை விளக்கிச் சொல்லிக் கொண்டிருந்தார். ஆனால் மற்றவர்களுக்கு இலேசில் விளங்கியதாகத் தோன்றவில்லை. அரைமணி நேரம் வரையில் கேட்டுக் கொண்டிருந்து விட்டு, மறுபடியும் ஆரம்பத்தில் கேட்ட கேள்வியையே கேட்டார்கள். திரும்பவும், "அடியைப் பிடியடா, பாரதபட்டா!" என்று அந்த மனிதர் விளக்க ஆரம்பித்தார். "இவர் யார்?" என்று விசாரித்து, "இவர் தான் மன்னார்குடி கே. சந்தானம் எம். ஏ., பி. எல்." என்று தெரிந்து கொண்டேன்.

அடுத்தாற்போல், 1922-ம் வருஷம் மார்ச் மாதத்தில் திருச்சிராப்பள்ளி சிறையில் ஸ்ரீ கே. சந்தானத்தைச் சந்தித்தேன். படைபடைக்கிற வெய்யிலில் ஒரு புளிய மரத்தடியில் பத்துப் பதினைந்து கைதிகள் உட்கார்ந்து பெரிய பாறாங்கற்களைச் சிறு சிறு கற்களாக உடைத்துக் கொண்டிருந்தார்கள். எல்லாரும் கோடு போட்ட சிறைக் கைதியின் சட்டையும் குல்லாயும் தரித்திருந்தார்கள். கழுத்தில், இன்ன நம்பர் கைதி என்று குறிப்பிடும் தகரத் தகடு, கயிறு கட்டித் தொங்கியது. இத்தகைய கோலத்தில் ஆட்களை யார், இன்னார் என்று அடையாளம் கண்டுபிடிக்க முடியவில்லை.

கல் உடைத்த கோஷ்டியில் ஒரு மனிதர் மற்றவர்களுக்கு ஏதோ ஒரு பொருளாதாரப் பிரச்னையைப் பற்றி விளக்கிச் சொல்லிக் கொண்டிருந்தார். அரை மணி நேரம் விளக்கிச் சொன்ன பிறகு, கேட்டுக்கொண்டிருந்தவர்களில் ஒருவர், "எல்லாம் சரிதான்; பதினாறு பென்ஸ் விகிதம் என்கிறீர்களே, அது என்ன?" என்று கேட்டார். "கடவுளே! இத்தனை நேரம் அதைத் தானே சொன்னேன்?" என்று மறுபடியும் ஸ்ரீ கே. சந்தானம் ஆரம்பித்தார். ஆம்; இவர்தான் மன்னார்குடி கே. சந்தானம் எம்.ஏ. பி.எல். என்று அறிந்துகொண்டேன்.

* * *

1920-ம் வருஷத்திலிருந்து 1948-ம் வருஷம் வரையில் ஸ்ரீ கே. சந்தானம் இடைவிடாமல் தேசத் தொண்டில் ஈடுபட்டு வந்திருக்கிறார். இத்தனை காலமும் இடைவிடாமல் காந்தி மகாத்மாவின் பக்தராகவும் ராஜாஜியின் இணையற்ற துணைவராகவும் இருந்து வந்திருக்கிறார்.

தேசியப் போர்முனை ஒவ்வொன்றிலும் முன்னணியில் நின்றிருக்கிறார். நிர்மாணத் தொண்டின் ஒவ்வொரு துறையிலும் ஈடுபட்டு ஊழியம் புரிந்திருக்கிறார்.

1922-ல் கள்ளுக்கடை மறியல் செய்து சிறை புகுந்தார். 1923-ல் நாபா சிறையில் சிலகாலம் வசித்தார். 1930-ல் ராஜாஜியின் வேதாரண்ணிய யாத்திரையில் சேர்ந்து சென்று சிறைப்பட்டார். பிறகு 1932-ம் வருஷத்திலும் 1940-ம் வருஷத்திலும் சிறைவாசம் செய்தார்.

1923-ம் வருஷத்தில் தமிழ்நாட்டில் கதர் வேலை பெரிய அளவில் ஆரம்பமான போது திருப்பூர் கதர் போர்டு காரியாலயத்தில் மானேஜராயிருந்து கதர் வேலையை நல்ல முறையில் அமைத்தார். திருச்செங்கோட்டில் ராஜாஜி காந்தி ஆசிரமம் ஆரம்பித்த காலத்திலிருந்து சுமார் பத்து வருஷம் குடிசையில் வசித்துத் தொண்டு புரிந்தார்.

சில காலம் சென்னை "இண்டியன் எக்ஸ்பிரஸ்" ஆசிரியராயிருந்தார். தஞ்சை, திருச்சி தொகுதியின் சார்பாக இந்தியச் சட்டசபை அங்கத்தினரானார்.

டில்லிக்குப் போன இடத்தில் "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" பத்திரிகை அவரைக் கைப்பற்றிக் கொண்டது. பல வருஷ காலம் "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" ஆசிரியராக இருந்து தொண்டு புரிந்தார்.

அரசியல் நிர்ணய சபை அங்கத்தினராகச் சென்னை சட்ட சபையினரால் தேர்ந்தெடுக்கப்பட்டார். அரசியல் நிர்ணய சபையின் நடவடிக்கைகளைப் பத்திரிகையில் கவனித்து வந்தவர்கள், இந்தியாவின் அரசியல் அமைப்பை உருவாக்கப் பெருமுயற்சி செய்தவர்களில் ஸ்ரீ கே. சந்தானம் ஒருவர் என்பதை அறிந்துகொண்டிருக்கலாம்.

* * *

ஸ்ரீ கே. சந்தானம் தமிழ்நாடு சமீப காலத்தில் அளித்த தேச பக்தர்களுக்குள்ளே மிகச் சிறந்த ஒரு தொண்டர். இந்திய தேசம் இந்த காலத்தில் அளித்த சிறந்த அறிவாளிகளுக்குள்ளே ஒருவர். பொது வாழ்விலே நேர்மைக்கும் ஒழுக்கத்துக்கும் [illegible] [illegible] இல்லாத தியாகத்துக்கும் உதாரணமாகக் காட்டக் கூடியவர்.

ராஜாஜியிடம் ஸ்ரீ கே. சந்தானம் கொண்டிருக்கும் பக்தி இணையற்றது. ஆனால் அது வெறும் குருட்டு பக்தியல்ல. எந்த விஷயத்

தையும் தன்னுடைய அறிவாராய்ச்சி என்னும் உலைக்களத்தில் காய்ச்சித் தட்டி அடித்துச் சரியாயிருக்கிறதா என்று பார்த்துத் தான் ஒப்புக்கொள்வார். மிகப் பெரும்பாலான விஷயங்களில் ராஜாஜி எந்த முடிவுக்கு வருகிறாரோ, அதே முடிவுக்கு இவரும் வந்து சேர்வார்.

சென்னை சட்டசபையில் ராஜாஜி படத்தைத் திறந்து வைக்கும்போது பண்டித ஜவாஹர்லால் நேரு சொன்னார்:—"எந்த விஷயத்தைப் பற்றியாவது விளக்கம் பெறுவதற்கு அதை யாருடனாவது விவாதிக்க வேண்டும் என்று ஏற்பட்டால், ராஜாஜியுடன் விவாதிப்பதையே நான் அதிகம் விரும்புவேன்!" என்றார்.

அம்மாதிரியே ராஜாஜி எந்த விஷயத்தைப் பற்றியாவது விவாதித்து விளக்கம் பெற விரும்பினால், "சந்தானம் எங்கே இருக்கிறார்? அவருக்கு வரச் சௌகரியப்படுமா, பார்!" என்று சொல்வது வழக்கம்.

*       *       *

இருபத்தெட்டு வருஷம் சாதாரண தேசத்தொண்டராயிருந்த பிறகு ஸ்ரீ கே. சந்தானம் பெரிய சர்க்கார் உத்தியோக பதவிக்கு வந்திருக்கிறார். இந்திய சுதந்திர சர்க்காரில் உதவி ரயில்வே மந்திரி ஆகியிருக்கிறார். இந்த உத்தியோகத்தை ஸ்ரீ சந்தானம் தேடிப் போகவில்லையென்று சத்தியமாகச் சொல்வேன். வேலைக்குத் தகுந்த ஆள் யார் என்று தேடிப் பிடித்துக் கொடுத்திருக்கிறார்கள்.

இந்திய சர்க்காரின் மந்திரிகள் வகிக்க வேண்டிய பொறுப்புகளுக்குள்ளே மிகக் கஷ்டமான பொறுப்பை ஸ்ரீ கே. சந்தானம் இப்போது ஏற்றுக் கொண்டிருக்கிறார்.

இந்திய ரயில்வேக்களின் ஊழல்கள் ஆழமாயும் அகலமாயும் பரவியிருப்பவை; நீடித்த காலமாக வேரூன்றிப் போனவை. ரயில்வேக்களின் ஊழல்களை ஒழிப்பது பிரம்மப் பிரயத்தனமான காரியம்.

ரயில்வேத் தொழிலாளிகள் இந்தியாவிலுள்ள வேறு எந்த இலாகாத் தொழிலாளிகளையும்விட அதிகமாகக் கட்டுப்பாடு பெற்றவர்கள்; பலம் பெற்றவர்கள். ஸோஷலிஸ்ட் கட்சியின் தலைவர் ஸ்ரீ ஜெயப்பிரகாச் நாராயண் இப்போது ரயில்வேத் தொழிலாளரின் தலைவராயிருக்கிறார்.

எனவே, ரயில்வேத் தொழிலாளர் தேச நன்மையை மறந்து தங்கள் பலத்தைப் பரீட்சை செய்வது என்று ஆரம்பித்தால் தேசத்தின் வாழ்வு சில காலம் சீர்குலைந்து போகும்படியாக நேர்ந்துவிடும்.

ரயில்வேத் தொழிலாளிகளின் நியாயமான கோரிக்கைகளை நிறைவேற்ற வேண்டும். அதே சமயத்தில் ரயில்வேக்களின் சொந்தக்காரர்களான இந்தியப் பொது மக்கள் முப்பத்தைந்து கோடி பேரைப் புறக்கணிக்க முடியாது. சுதந்திர இந்தியாவில் ரயில்வே நிர்வாகம் சீர்திருந்தா விட்டால் பொதுமக்கள் மிக்க ஏமாற்றமடைவார்கள்.

தொழிலாளருடைய கோரிக்கைகளைப் பூர்த்தி செய்து, பொதுமக்களுக்கு வசதிகளைச் செய்து கொடுப்பதோடுகூட, இந்திய சர்க்கார் 'இன்ஸால்வெண்ட்' ஆகாமலும் பார்த்துக்கொள்ள வேண்டும்! ரயில்வேக்கள் மூலம் இத்தனை நாளும் கிடைத்த வருமானம் இனியும் இந்திய சர்க்காருக்குக் கிடைத்து வரும்படி செய்யவேண்டும். இல்லாவிட்டால், இந்திய சர்க்காரின் பொருளாதார நிலை சீர்குலைந்து போகும்.

இவ்வளவு கஷ்டமான வேலையை ஸ்ரீ கே. சந்தானம் ஏற்றுக்கொண்டிருக்கிறார். அதை அவர் திறமையாக வகித்து வெற்றி பெறுவார் என்று எதிர்பார்ப்போம்.



பம்பாய்த் தமிழ்ச் சங்கத்தின் ஆதரவில் சமீபத்தில் மணிக்கொடி ஸ்ரீ கு. ஸ்ரீநிவாஸன் தலைமையில் நடைபெற்ற பாரதி விழாவில் பாரதி பிரசங்கப் போட்டி ஒன்று நடந்தது. அதில் குமாரி வி. பேபி சரோஜா முதற் பரிசு பெற்றாள். சென்ற மூன்று ஆண்டுகளாகவே மேற்படி போட்டியில் முதற் பரிசு பெற்றதற்காக பாரதியின் பெயரில் விசேஷப் பரிசு ஒன்றும் குமாரி சரோஜாவுக்குக் கொடுக்கப்பட்டது.




மூன்றாம் அத்தியாயம்

## ஆண்டு நிறைவில் அடிதடி

சிரஞ்சீவி பாலசுப்பிரமணியனின் ஆண்டு நிறைவுக் கலியாணம் மேள தாளத்துடன் சிறப்பாக ஆரம்பமாயிற்று. கலியாண வீட்டில் எல்லாரும் வெகு உற்சாகமாக இருந்தார்கள். இதற்கு முக்கிய காரணம் சூரியாவின் எதிர்பாராத வருகைதான். நெடுநாளாகப் பாராத பிள்ளையைப் பார்த்துக் கிட்டாவய்யரும் அவருடைய மனைவியும் ஆனந்தக் கடலில் மூழ்கினார்கள். லலிதாவின் குதூகலத்தைப் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை. தன் கணவன் சிறைச்சாலையிலிருப்பதைக் கூட அவள் அன்றைக்கு மறந்து கலியாண ஏற்பாடுகளில் உல்லாசமாக ஈடுபட்டு ஓடியாடிக் கொண்டிருந்தாள்.

லலிதாவின் மாமனார் ஆத்மநாதய்யருக்கு, சூரியாவின் வருகை காரணமாக எதிர் வீட்டுத் தாமோதரம் பிள்ளையுடன் மறுபடியும் பேச்சு வார்த்தை தொடங்கியது பற்றி மிகவும் சந்தோஷம் உண்டாயிற்று.

சூரியாவுக்கும் அன்றைக்கு என்றுமில்லாத உற்சாகம் ஏற்பட்டிருந்தது. அப்பா அம்மா முதலியவர்கள் தன்னை எப்படி வரவேற்பார்களோ என்று அவன் மனதில் ஏற்பட்டிருந்த சந்தேகம் நீங்கிற்று. அமரநாதன் தன்னுடைய விரோதத்தை மறந்து விடவில்லையென்பதும் அவனுடைய தகப்பனார் தாமோதரம் பிள்ளை கூடத் தன்னுடன் சல்லாபமாகப் பேசியதும் அவனுடைய உற்சாகம் வளரக் காரணமாயிருந்தது. இதுமட்டுமா? அவனுடன் பெருஞ் சண்டை போட்ட தமையன் கங்காதரன் இன்று அன்பாகப் பேசினான். "சூரியா! அப்பாவுக்கு வயதாகி விட்டது. அவரால் பண்ணைக் காரியங்களைக் கவனிக்க முடியவில்லை. நானும் என் வேலையை விட்டுக் கிராமத்துக்குப்போய் இருப்பது முடியாத காரியம். நீதான் ராஜாம்பேட்டைக்குப் போய் அப்பாவுக்கு ஒத்தாசையாயிருக்கவேண்டும். குடியானவர்கள் விஷயத்தில் உன் இஷ்டம்போல் ஏது வேணுமானாலும் செய்துகொள். நான் ஆட்சேபிக்கவில்லை. இந்த வருஷம் அலைந்தது போதும். பேசாமல் ஊருக்கு வந்துவிடு!" என்று கங்காதரன் கூறியது சூரியாவுக்கு மிக்க ஆச்சரியத்தையும் மகிழ்ச்சியையும் அளித்தது. எல்லாரும் தன்னிடம் இவ்வளவு அன்பாக இருப்பது ஏன் என்று அடிக்கடி கேட்டுக் கொண்டான். தேசத்தில் பல மகான்கள் தியாகம் செய்து சிறை புகுந்திருப்பதினால் எல்லாருடைய மனதும் ஓரளவு பண்பட்டிருப்பதாக அவனுக்குத் தோன்றியது. தானும்

அந்தத் தியாக யக்ஞத்தில் ஒரு சிறு தொண்டு செய்து வருவதனாலேயே தன்னிடம் பந்துமித்திரர்கள் அவ்வளவு அன்பாக நடந்து கொள்கிறார்கள் என்ற முடிவுக்கு வந்தான்.

எல்லாரும் "சூரியா! சூரியா!" என்று அவனைப் பிரமாதப் படுத்துவதைப் பார்த்து விட்டு லலிதாவின் சீமந்த புத்திரி பட்டுவும் அவனுடன் அதி விரைவில் சிநேகமாகி விட்டாள். சூரியாவின் மடியில் ஏறி உட்கார்ந்து கொண்டு வேறு யார் அழைத்தாலும் வரமாட்டேன் என்று அந்தக் குழந்தை பிடிவாதம் பிடித்தது.

இதனை யெல்லாம் சூரியா வெகு நாளாக அறியாத உற்சாகத்துடன் இருந்த சமயத்தில் காலை சுமார் எட்டு மணிக்கு, வாசலில் தபால்காரன் வந்தான். தபால்காரனுடைய குரல் சூரியாவுக்கு ஏற்கெனவே கேட்ட குரலாகத் தொனித்தது. உடனே, லலிதா, "தெரியுமா, அண்ணா, உனக்கு? தபால்கார பாலகிருஷ்ணன் இப்போது இந்த ஊருக்கு மாற்றலாகி வந்து விட்டான். இந்த வீதிக்கு அவன் தான் இப்போது தபால் கொண்டு வந்து கொடுக்கிறான்!" என்றாள். அவள் சொல்லி வாய் மூடுவதற்குள்ளே "இந்த வீட்டிலே கே. எஸ். நாராயண் என்று யாராவது வந்திருக்கிறார்களா?" என்று பாலகிருஷ்ணன் கேட்டது சூரியாவின் காதில் விழுந்தது.

உடனே சூரியா வீட்டுக்கு வெளியில் சென்று, "என்ன, பாலகிருஷ்ணா? சௌக்கியமா? என்னை நினைவு இருக்கிறதா?" என்று கேட்டான்.

"ஓகோ! நீங்கதானா, ஸார்? அப்படித்தான் இருக்கும் என்று நினைத்தேன். என்ன சேதி! என்ன சமாசாரம்? எப்போது வந்தீர்கள்?— இந்தக் கடிதம் உங்களுக்குத் தானா, பார்த்துச் சொல்லுங்கள்!" என்று ஒரு கடிதத்தை எடுத்து நீட்டினான்.

விலாசம் தாரிணியின் கையெழுத்தில் இருப்பதைக் கண்டு சூரியா ஆவலுடன் அதை வாங்கி, "ஆமாம், எனக்குத் தான்!" என்றான்.

"ஓகோ! கே. சூரியநாராயணய்யர் என்ற பெயரை கே. எஸ். நாராயண் என்று சுருக்கிக் கொண்டீர்களாக்கும். நினைத்தேன்; நினைத்தேன். லலிதா அம்மாளுக்குக் கூட ஒரு கடிதம் இருக்கிறது. அதையும் நீங்களே..." என்று சொல்வதற்குள், லலிதா அங்கு வந்து சேர்ந்தாள். "இந்தாங்க அம்மா! உங்களுக்கு ஒரு கடிதம். குழந்தைக்கு இன்றைக்கு ஆண்டு நிறைவுக் கலியாணம் போலிருக்கிறது. ராஜம்பேட்டையிலே நடந்த கலியாணம் நேற்று நடந்தது போல் இருக்கிறது!" என்று சொல்லிக் கொண்டே பாலகிருஷ்ணன் லலிதாவிடம் ஒரு கடிதத்தைக் கொடுத்தான். பிறகு சூரியாவைப் பார்த்து, "ஸார்! மதகடியில் நாம் சண்டை போட்டோமே ஞாபகம் இருக்கிறதா? கடிதத்தை நான் பிரித்துப் பார்த்துவிட்டேன் என்று கோபித்துக் கொண்டீர்களே?" என்றான்.

"அதைப் பற்றி இப்போது என்ன? எந்தக் காலமோ நடந்தது!" என்று சொன்னான் சூரியா.

"அதற்காகச் சொல்லவில்லை. இப்போது உங்களிடம் கொடுத்தேனே. அந்தக் கடிதத்தை நான் பிரித்துப் பார்க்கவில்லை யென்பதற்காகத்தான் சொன்னேன். தெரிகிறதா?"

சூரியா உடனே சந்தேகத்துடன் தன் கையிலிருந்த கடிதத்தை முன்னும் பின்னும் திருப்பி உற்றுப் பார்த்தான்.

பாலகிருஷ்ணன் புன்னகையுடன் "என்ன, ஸார்! பிரித்துப் பார்த்திருக்கிறதா?" என்று கேட்டான்.

"இல்லை!" என்றான் சூரியா.

"அதற்காகத்தான் சொன்னேன். ஒருவேளை பிரித்துப் பார்த்திருந்தாலும் பிரித்தது நான் இல்லை. பழைய ஞாபகத்தை வைத்துக்கொண்டு என் பேரில் சந்தேகப்படாதீர்கள். தெரிகிறதா? லலிதா அம்மா! உங்கள் கடிதத்தையும் நான் பிரித்துக் கிரித்துப் பார்க்கவில்லை. மிஸ்டர் சூரியா பெரிய சந்தேகப் பிராணி ஆயிற்றே! அவர் என் பேரில் சந்தேகப்படக் கூடாது! நான் போய் வரட்டுமா?"

"போகட்டுமேன்! மத்தியானம் இங்கே வந்து சாப்பிட்டு விட்டுப் போகலாமே?" என்றாள் லலிதா.

"அந்தக் காலம் மலையேறிப் போச்சு, அம்மா! இப்போ எனக்கும் குடும்ப பாரம் சுமந்திருக்கிறது. மத்தியானம்

வீட்டுக்குச் சாப்பிடப் போகாவிட்டால் நல்ல டோஸ் கிடைக்கும். சாப்பாடு கிடக்கிறது, அம்மா! மனது நல்ல மனதாயிருக்கவேணும்; அவ்வளவுதான். மிஸ்டர் சூரியா! உங்கள் கடிதத்தை நான் பிரித்துப் பார்த்ததாக எண்ணிக்கொள்ள வேண்டாம். தெரிகிறதா? அதற்கு மேலே நான் ஒன்றும் சொல்வதற்கில்லை. என்ன, லலிதா அம்மா! நான் சொல்கிறது என்ன?" என்று சொல்லிக்கொண்டே பாலகிருஷ்ணன் கடையைக் கட்டினன்.

அவன் கொஞ்ச தூரம் போனதும் சூரியா லலிதாவைப் பார்த்து, "பாலகிருஷ்ணனுடைய கிறுக்கு முன்னை விட அதிகம் போயிருக்கிறதே? இப்படி உளறுகிறனே?" என்றான்.

"அவன் ஒன்றும் உளறவில்லை, அண்ணு! அவனுக்குக் கிறுக்கும் இல்லை. பாலகிருஷ்ணன் சொன்னதின் அர்த்தம் உனக்குப் புரியவில்லையா?"

"அவன் சொன்னதிலே அர்த்தம் வேறே இருக்கா?" என்றான் சூரியா.

"ஏன் இல்லை? உனக்கு இது தெரியாதது ஆச்சரியமாயிருக்கிறது. வடக்கேயெல்லாம் ஒருவேளை இந்த வழக்கம் கிடையாதோ, என்னமோ? இவர் ஜெயிலுக்குப் போனதிலிருந்து எனக்கு வரும் கடிதங்களையெல்லாம் பிரித்துப் பார்த்து விட்டுத்தான் அனுப்புகிறார்கள். இதற்குச் 'சென்ஸாரிங்' என்று பெயராம்......"

சூரியாவுக்குச் 'சுருக்' என்றது. மறுபடியும் கடிதத்தை முன்பின் திருப்பிப் பார்த்தான். பார்த்து விட்டுத் தைரியமாக, "ஓஹோ! பாலகிருஷ்ணன் அந்த விஷயத்தைப் பற்றியா சொன்னான்? எனக்கு என்னமோ அது மனதில் படவில்லை. எனக்கு வந்திருக்கும் கடிதத்தை யாரும் பிரித்துப் பார்க்கவும் இல்லை!" என்றான்.

"உனக்கு எப்படித் தெரியும், பிரித்துப் பார்க்கவில்லையென்று? சில கடிதங்களைப் பகிரங்கமாய்ப் பிரித்துப் பார்த்து மேலே 'சென்ஸார் செய்யப்பட்டது' என்ற சீட்டை ஒட்டி விடுவார்களாம். இன்னும் சில கடிதங்களைப் பிரித்தது தெரியாதபடி திருப்பி ஒட்டி விடுவார்களாம். எனக்கு இரண்டு விதமாகவும் வருவதுண்டு."

"உன் அகத்துக்காரர் சிறையிலிருந்து உனக்கு எழுதும் கடிதங்களை அப்படியெல்லாம் பிரித்துப் பார்த்து அனுப்பலாம். ஆனால் நான் இன்றைக்கு வந்தவன்தானே? என் கடிதத்தை எதற்காகப் பிரிக்கிறார்கள்?"

"அப்படியில்லை, அண்ணு! இந்த வீட்டு மேல் விலாசம் இருப்பதால் ஒருவேளை பிரித்துப் பார்த்திருப்பார்கள். நீயும் அப்படி இலேசுப்பட்டவன் அல்லவே? என்னென்னமோ செய்து கொண்டிருக்கிறாய் அல்லவா? நமக்குப் பார்த்தால் உறை பிரிக்கப்பட்டதாகவே தெரியாது. ஆனால் பாலகிருஷ்ணனுக்குப் பார்த்தவுடனே தெரிந்து போய் விடும். அவன் சொன்னதிலிருந்து நம் இரண்டு பேருக்கும் வந்த கடிதங்களைப் பிரித்திருப்பார்கள் என்று நினைக்கிறேன். எல்லாவற்றுக்கும் கடிதத்தைப் பிரித்துப் படித்துப் பார்க்கலாம்!"

இவ்விதம் சொல்லிக் கொண்டே லலிதா உறையைப்பிரித்தாள். உள்ளேயிருந்த கடிதத்தைப் பார்த்ததும் அவளுடைய முகம் மலர்ந்தது. "இவர்தான் ஜெயிலிலிருந்து எழுதியிருக்கிறார்! குழந்தையின் ஆண்டு நிறைவு அன்றைக்குச் சரியாக வந்து சேரும்படியாக எழுதியிருக்கிறார். அவர் மட்டும் இன்று இங்கே இருந்திருந்தால் எவ்வளவு நன்றாயிருந்திருக்கும்? நீ வந்ததற்காக எவ்வளவு சந்தோஷப்பட்டிருப்பார்?" என்றாள் லலிதா.

இதற்குள் உள்ளேயிருந்து அம்மா கூப்பிடும் குரல் கேட்கவே லலிதா வீட்டுக்குள் சென்றாள்.

சூரியாவும் தனக்கு வந்த கடிதத்தைப் பிரித்துப் பார்த்தான். பிரிக்கும் போதே அவன் மனதிலிருந்த கலக்கம் அகன்று விட்டது. கடிதம் எழுதியிருப்பது தாரிணி. ஸி. ஐ. டி. போலீஸாருக்கு உபயோகப்படக்கூடிய எந்த விஷயமும் அவள் எழுதியிருக்கமாட்டாள். புரட்சி கோஷ்டியைச் சேர்ந்தவர்கள் ஒருவருக்கொருவர் கடிதம் எழுதும்போது மனிதர்களின் உண்மைப் பெயர்களைக்கூடக் குறிப்பிடுவதில்லை. எல்லாருக்கும் மாறு பெயர்கள் இருந்தன. தாரிணிக்குச் 'சரித்திரம்' என்று பெயர். சூரியாவுக்குத் 'தூதன்'

என்று பெயர். இப்படி எல்லாம் முன் ஏற்பாடு செய்துகொண்டிருக்கும் போது ஸி. ஐ. டி. பிரித்துப் பார்த்து என்ன தெரிந்து கொள்ள முடியும்?

சூரியா எண்ணியது போலவே தாரிணியின் கடிதத்தில் போலீஸுக்கு உபயோகப்படக்கூடிய விஷயம் ஒன்றுமில்லை. ஆனால் வேறுவிதக் கவலை சூரியாவுக்குத் தரக்கூடிய விஷயம் இருந்தது. தாரிணி வெகு சுருக்கமாகச் சில வரிகள்தான் எழுதியிருந்தாள்:— "அத்தங்காளின் நிலைமை முன்னைவிட மோசமாயிருக்கிறது. உடம்பு, மனது ஒன்றும் சரியாயில்லை. உங்களைச் சந்திக்க விரும்புகிறாள். கூடிய சீக்கிரம் வந்து சேரவும். நீங்கள் உடனே வந்து சேராவிட்டால் ஏதாவது விபரீதமாக முடியலாம். எனக்கு மிகுந்த கவலையாயிருக்கிறது.—சித்ரம்"

இந்தக் கடிதம் சூரியாவை ரொம்பவும் கலக்கி விட்டது. தென்னாட்டுக்கு எந்த வேலையை முன்னிட்டு வந்தானோ அது பூர்த்தியாகி விட்டதாகச் சொல்வதற்கில்லை. ஆயினும் பிற்பாடு பார்த்துக் கொள்ளலாம் என்று திரும்பிப் போக வேண்டியதுதான். ஆகா! இது என்ன தொல்லை! நல்ல அத்தங்காள் வந்து சேர்ந்தாள். தன்னுடைய வேலையையெல்லாம் கெடுப்பதற்கு! அந்த மூர்க்கன், அவளுடைய கணவன்! இப்படியும் ஒரு மனிதன் உண்டா? — சீதாவின்



வாழ்க்கை எப்படி முடியப் போகிறதோ, தெரியவில்லையே? கடவுளே!

ஆண்டு நிறைவுக் கலியாணத்துக்காக வைதிகப் பிராம்மணர்களும் பந்து மித்திரர்களும் வரத் தொடங்கினார்கள். சூரியாவும் விட்டுக்குள்ளே சென்றான். ஆயுஷ்ஹோமம் முதலிய வைதிக காரியங்கள் ஆரம்பமாயின. வைதிகர்கள் வேத மந்திரங்களை ஓதினார்கள். ஸ்திரீகள் 'கௌரீ கலியாணம்' பாடினார்கள். நாதஸ்வர கோஷ்டியார் ஜாம் ஜாம் என்று முழக்கினார்கள். சூரியாவும் சற்று நேரத்துக்கெல்லாம் மேற்படி வைபவங்களில் முழுதும் மனதை ஈடுபடுத்தினான். தான் வந்த காரியத்தையும் புது டில்லி அத்தங்காளின் கஷ்டத்தையும் தாரிணியின் கடிதத்தையும் மறந்து விட்டான் என்றே சொல்லலாம்.



• • •

காலை மணி 10—30 ஆயிற்று. தாமோதரம் பிள்ளை தம்முடைய ஆபீஸ் அறையில் உட்கார்ந்து புத்தகம் படித்துக் கொண்டிருந்தார். டெலிபோன் மணி அடித்தது. ரிஸீவரை எடுத்துக் காதில் வைத்துக் கொண்டு பேசினார். "ஹலோ! தாமோதரம் பிள்ளை பேசுகிறது...டி. எஸ். பி. ஸாரா?— என்ன விசேஷம்?— எதிர் வீட்டிலா!— ஓகோ!— நான் எதிர் வீட்டுப் பக்கம் எட்டிப் பார்க்கிறது கூடக் கிடையாதே?... உங்களுக்குத் தான் நன்றாய்த் தெரியுமே?...இல்லை, நான் பார்க்கவில்லை. தெரியாது; ஒன்றுமே தெரியாது! ...... வாருங்கோ! வாருங்கோ! பேஷாய் வாருங்கோ! எல்லாத் தமாஷையும் என் வீட்டிலிருந்தே பார்க்கிறேன்!"

டெலிபோன் ரிஸீவரை வைத்த பிறகு தாமோதரம் பிள்ளை மேலே நோக்கிய வண்ணம் இரண்டு நிமிஷம் யோசித்துக் கொண்டிருந்தார். பிறகு, "அமரநாத்!" என்று அழைத்தார்.

அமரநாத் அறைக்குள்ளே வந்தான்.

"எங்கேயோ புறப்படுகிறாப் போல் இருக்கே?" என்றார்.

"ஆம், அப்பா! நானும் சித்ராவும் எதிர்வீட்டுக்குப் புறப்பட்டுக் கொண்டிருக்கிறோம். போகலாமல்லவா?"

"அவசியம் போகலாம், அமர்நாத்! நீ எதர் வீட்டுக் கலியாணத்துக்குப் போவதில் எனக்கு ஆட்சேபம் ஒன்றுமில்லை. ஆனால் ஒரு விஷயத்தைப் பற்றி யோசிக்க வேண்டும்."

"என்னத்தை யோசிக்கிறது? நானும் சித்ராவும் கட்டாயம் போகத்தான் போகிறோம். நியாயமாய்ப் பார்த்தால் நீங்கள் கூட வரலாம். எத்தனை நாளைக்கு மனதிலே துவேஷத்தை வளர்த்துக் கொண்டிருக்கிறது?"

"கூடாது, கூடாது! துவேஷத்தை வளரவிடவே கூடாது. உண்மையில் நான் கூடக் கலியாணத்திற்கு வருவ

தாகத்தான் இருந்தேன். அதற்குள் ஒரு தடை குறுக்கிட்டிருக்கிறது...?"

"அது என்ன தடை, அப்பா?"

"இந்தப் பையன்.—உன் சிநேகிதன்,—சூரியாவைப் பற்றி இந்த ஊர்ப் போலீஸுக்கு ஏதோ தகவல் வந்திருப்பதுபோலத் தோன்றுகிறது......"

"என்ன? என்ன?" என்று திடுக்கிட்டுக் கேட்டான் அமரநாத்.

"ஆமாம்; சூரியாவைப்பற்றி ஏதோ சி. ஐ. டி. தகவல் வந்திருக்கும்போலிருக்கிறது. இப்போது டெலிபோனில் டி. எஸ். பி. என்னைக் கேட்டார். 'சூரியா அலயஸ் ஞாதன்' என்கிற பையன் எதிர் வீட்டுக்கு வந்திருக்கிறது தெரியுமா என்று கேட்டார்..."

"நீங்கள் என்ன சொன்னீர்கள்?"

"எனக்கு எப்படி அது தெரியும்? எனக்கும் எதிர் வீட்டுக்கும்தான் ஜன்ம விரோதமாயிற்றே? உமக்குத் தெரியாதா?—என்றேன். வீட்டு வாசலில் ஒரு புது இளைஞனைப் பார்க்கவில்லையா என்று கேட்டார். அங்க அடையாளம் எல்லாம்கூடச் சொன்னார். 'தெருவிலே நின்று வருகிறவர் போகிறவரையெல்லாம் பார்ப்பதுதான் எனக்கு வேலையா?' என்று நான் பதிலுக்குக் கேட்டேன்......"

"அப்புறம்?"

"அப்புறம் என்ன? சீக்கிரத்தில் போலீஸார் இங்கே வரப் போகிறார்கள்! எதிர் வீட்டில் அமளி துமளிப்படும். இந்த நிலைமையில் நான் எப்படி எதிர் வீட்டுக்குப் போவது? என்னை அங்கே பார்த்தால் டி. எஸ். பி. யிடம் நான் சொன்னது பொய் என்று ஏற்பட்டுவிடும் அல்லவா!"

"அப்பா! இப்போது என்ன செய்யலாம்? சூரியாவுக்கு ஓர் எச்சரிக்கை கொடுக்க வேண்டாமா?"

"அது உன் இஷ்டம். நான் சொல்ல வேண்டியதைச் சொல்லி விட்டேன். அப்புறம் உன் உசிதம்போலச் செய். ஒரு விஷயம். எச்சரிக்கை செய்வதாயிருந்தால் உடனே செய்யவேண்டும். இன்னும் பதினைந்து நிமிஷத்தில் போலீஸ் படை இங்கே வந்துவிடும். சூரியாவை அரஸ்டு செய்து கொண்டு போனால், லாக்—அப்பிலேயே குத்துயிராய்ச் செய்து விடுவார்கள். நகக் கணுக்களில் ஊசியை ஏற்றி அவன் அறியாத உண்மைகளையெல்லாம் சொல்லும்படி செய்வார்கள்......நம் ஊர்ப் போலீஸ்காரர்கள் இவ்வளவு மிருகத்தனமாக நடந்துகொள்வார்கள் என்று நீ கனவிலேகூட எண்ணியிருக்க முடியாது. தெரிகிறதா?"

"அப்பா! நீங்கள் சொல்லும்போதே எனக்கு மயிர்க் கூச்சல் உண்டாகிறது. ஆனால் சூரியாவுக்கு இப்போது வெறுமனே எச்சரிக்கை செய்து என்ன பிரயோஜனம்? நீங்களோ இன்னும் பதினைந்து நிமிஷத்தில் போலீஸார் வந்து விடுவார்கள் என்று சொல்கிறீர்கள். அதற்குள் அவன் எப்படித் தப்பிக்க முடியும்? எங்கே போய் ஒளிந்து கொள்வான்!"

"இதையெல்லாம் என்னைக் கேட்டு என்ன பயன்? நீயும் உன்னுடைய சிநேகிதனும் எப்படியாவது போங்கள். திடீரென்று அவன் எங்கே போய் ஒளிந்து கொள்வான்? அக்கம் பக்கத்தில் யாராவது உதவி செய்தால்தான் தப்பித்துக் கொள்ளலாம்."

"அப்பா! மன்னித்துக் கொள்ளுங்கள். சூரியாவுக்கு இந்த வீட்டில் அடைக்கலம் கொடுக்கலாமா?"

"மறுபடி என்னைக் கேட்கிறாயே? இந்த வீட்டில் எனக்கு எவ்வளவு பாத்தியதை உண்டோ, அவ்வளவு உனக்கும் உண்டு. உன்னிஷ்டம் போல் செய். மேலே மாடியில் பின்கட்டு அறையில் போட்டுப் பூட்டிச் சாவியை வேறுமாதிரியாய் காணாமல் அடித்து விடு! ஆனால் உன் இஷ்டம். என்னை இந்த விஷயமாக ஒன்றுமே கேட்க வேண்டாம்! தெரிந்ததா?"

மறு நிமிடம் அமரநாத், சித்ரா இன்றித் தான் மட்டும் வெளியேறி எதிர் வீட்டுக்குச் சென்றான். ஐந்து நிமிஷத்துக்கெல்லாம் சூரியாவைக் கூட்டிக்கொண்டு திரும்பினான். மேல் மச்சுக்கு அழைத்துப் போய்த் தகப்பனார் சொற்படி பின்கட்டு அறையில் அடைத்துக் கதவைப் பூட்டினான்.

* * *

சில நிமிஷத்துக்கெல்லாம் வீதியில் தட தட தட வென்று மோட்டார்

சைக்கிள் வரும் சத்தம் கேட்டது. மோட்டார் சைக்கிளுடன் ஜீப் ஒன்றும் வந்தது. வீதியின் இருபுறத்திலிருந்தும் போலீஸார் மார்ச் செய்து கொண்டு வந்தார்கள். கைதிகளைப் போட்டு அடைத்துக் கொண்டு போகும் இரும்புக் கூண்டு போட்ட போலீஸ் வண்டி ஒன்றும் வந்தது.

ஆத்மநாதய்யரின் வீட்டு வாசலிலும் கொல்லையிலும் போலீஸ் ஜவான்கள் நின்று கொண்டார்கள். அப்புறம் சிறிது நேரம் ஒரே கூச்சலும் குழப்பமுமாக இருந்தது. யார் என்ன செய்தார்கள், என்ன சொன்னார்கள் என்பது ஒன்றும் தெரியவில்லை. சில நிகழ்ச்சிகள் ஒருவாறு நிச்சயமாகச் சொல்லக் கூடியவையாக இருந்தன.

சத்தத்தைக் கேட்டு விட்டு வைதிகப் பிராமணர்கள் மந்திரம் சொல்லுவதை நிறுத்தி விட்டு வெளியில் ஓடி வந்தார்கள். அவர்களை யெல்லாம் குண்டாந்தடியால் அடித்துப் போலீஸார் வீட்டுக்குள்ளே விரட்டினார்கள். "யாரையும் வெளியில் விட வேண்டாம்!" என்று ஒரு பெரும் அதிகாரக் குரல் உத்திரவிட்டது.

ரேழியில் உட்கார்ந்திருந்த நாதஸ்வரக்காரர்கள் வெளியேறப் பார்த்தார்கள். அதன்பயனாகத் தவுல் வாத்தியம் இரண்டு பக்கமும் படார் என்று கிழிந்தது! நாதஸ்வரக் குழாயும் ஒத்து வாத்தியமும் தரையில் விழுந்து நொறுங்கின. ஜாலராத் தாளங்கள் சுக்கு நூறாயின.

போலீஸ் உத்தியோகஸ்தர்கள் வீட்டுக்குள்ளே பிரவேசிக்கப் பார்த்த போது கிட்டாவய்யர் வந்து வாசற்படியில் நின்றார். தன்னுடைய பிள்ளையைப் பிடிக்கத்தான் வந்திருக்கிறார்கள் என்று ஒருவாறு தெரிந்து கொண்டார் போலும். பையன் வெளியேறி விட்டான் என்பது அவருக்குத் தெரியாது. ஆகையால் கையைக் கட்டிக்கொண்டு கம்பீரமாக நின்று, "உள்ளே வைதிக காரியம் நடக்கிறது. ஒருவரும் நுழையக்கூடாது. அப்படி நுழைந்தால் என் செத்த உடம்பை மிதித்துக் கொண்டுதான் போக வேண்டும்!" என்றார். அவர் சொல்லி வாய் மூடுவதற்குள் மண்டையில் ஒரு அடி; கழுத்தில் ஒரு கல்தா!

ஆத்மநாதய்யர் முன் வந்து, "ஏன், ஸார், இவ்வளவு தடபுடல் செய்கிறீர்கள்? சாவதானமாகப் பரிசோதனை செய்து யார் வேண்டுமோ அவரைக் கொண்டு போங்கள். யாரும் தடுக்கவில்லை. வீணாகப் பெண்பிள்ளைகளைப் பயப்படுத்த வேண்டாம்" என்றார். ஆத்மநாதய்யருடைய சாந்தமான பேச்சின் பலனாக அவருக்கு மண்டையில் இரண்டு அடி கிடைத்தது.

அவ்வளவுதான்; போலீஸார் தடதட வென்று வீட்டுக்குள்ளே பிரவேசித்தார்கள். முன்கட்டிலும் பின்கட்டிலும் மேல்மாடியிலும் ஒவ்வொரு அறையாகப் புகுந்து தேடினார்கள். காலில் தட்டுப் பட்டதை யெல்லாம் உதைத்துத் தள்ளினார்கள். கையில் அகப்பட்டதை யெல்லாம் உடைத்து நொறுக்கினார்கள். எதிரில் தட்டுப் பட்டவர்களைப் பிடித்துத் தள்ளினார்கள்; அல்லது தடியால் அடித்தார்கள். படுக்கையறைகளுக்குள்ளே புகுந்து மெத்தை தலையணைகளைப் பிய்த்து எறிந்தார்கள். சாமான் அறைக்குள்ளே புகுந்து சட்டிப் பானைகளை உடைத்தார்கள். சமையல் கட்டுக்குள்ளே பிரவேசித்து அடுப்பிலே கொதித்துக்கொண்டிருந்த சாம்பார் பாத்திரத்தில் குண்டாந்தடியை விட்டுத் துளாவிப் பார்த்தார்கள். ஆனால் அவர்கள் தேடி வந்த ஆசாமி எங்கேயும் அகப்படவில்லை.

வீட்டு ஸ்திரீகள் இன்னது செய்வது என்று தெரியாது அழுது கொண்டே அங்கு மிங்கும் ஓடினார்கள். குழந்தைகள் 'கோ' வென்று கதறினார்கள்.

இதற்குள் ஒருவாறு சமாளித்துக் கொண்டு எழுந்துவந்த கிட்டாவய்யர் "எதற்காக எல்லாரும் இப்படிக் கூச்சல் போடுகிறீர்கள்? எல்லாரும் பேசாமலிருங்கள். நடக்கிறது நடக்கட்டும். பகவான் ஒருவர் இருக்கிறார்!" என்று சத்தம் போட்டுக் கொண்டிருந்தார்.

முதலில் போலீஸார் தாங்கள் தேடி வந்த ஆசாமி கங்காதரனே என்று எண்ணி அவனைப் பிடித்து நாலு அடி கொடுத்தார்கள். ஆனால் அவனுடைய தலையில் வைத்திருந்த கட்டுக் குடுமி, புரட்சிக்காரன் அவன் இல்லை

என்பதை நிரூபித்தது. பிறகு அவனை விட்டுவிட்டார்கள்.

அநாவசியமாக அடிபட்ட கங்காதரன், "எனக்கு அப்போதே தெரியும்! நான் சொன்னால் யார் கேட்கிறார்கள்? அந்தக் காலிப் பயலை விட்டுக்குள்ளேயே விடக்கூடாது என்று சொன்னேனே, கேட்டார்களா? அருமைப்பிள்ளை என்று செல்லம் கொஞ்ச ஆரம்பித்து விட்டார்கள். அவன்தான் சனீசுவரனுடைய அவதாரம் ஆயிற்றே! வரும்போதே சங்கடத்தையும் கூட அழைத்துக்கொண்டு வருவானே?" என்று இரைச்சல் போட்டுக் கொண்டிருந்தான்.

போலீஸார் வீடு முழுவதும் சல்லடை போட்டுச் சலித்துப் பார்த்தும் பயனில்லை. தேடிய ஆசாமி அகப்படவில்லை. மேலே, கீழே, அறைக்குள்ளே, அலமாரிக்குள்ளே, அரிசி மூட்டைக்குள்ளே, சாம்பார் பாத்திரத்துக்குள்ளே, மெத்தை தலையணைக்குள்ளே,—எங்கேயும் அவனைக் காணவில்லை. தரையிலே சுரங்க அறை ஏதேனும் இருக்குமோ என்று சில போலீஸ் ஜவான்கள் குண்டாந் தடியால் தட்டிக்கூடப் பார்த்தார்கள். அதிலும் பயனில்லை. அரைமணி நேர அமர்க்களத்துக்குப் பிறகு போலீஸ்காரர்களுக்குத் திரும்பிப் போக உத்தரவு பிறந்தது. போகிற போக்கில் வைதிகப் பிராமணர்களின் தலையிலும் முதுகிலும் வயிற்றிலும் ஒவ்வொரு அடிகொடுத்து விட்டுப் போலீஸார் சென்றார்கள்.

"பிராரப்தம்! சஞ்சிதகர்மம்! கர்மபலன் யாரை விட்டது? இராமலக்ஷ்மணர்களும் பஞ்ச பாண்டவர்களும் கஷ்டப்பட வில்லையா? காந்தி மகாத்மாவும் ஜவாஹர்லால் நேருவும் சிறையில் கஷ்டப்பட வில்லையா? அந்த மகான்களுடைய பாடே அப்படி இருக்கும்போது நாம் எல்லாரும் எந்த மூலை?" என்று வைதிகர்கள் ஒருவருக்கொருவர் தைரியம் சொல்லிக்கொண்டு ஆறுதல் பெற்றார்கள்.

* * *

தாமோதரம் பிள்ளை தம்முடைய வீட்டு வாசலில் வந்து நின்று எதிர் வீட்டில் நடந்த அமர்க்களத்தையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்தார். பார்க்கப் பார்க்க, அவர் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தது.

வந்த காரியம் பயன் படாமல் போலீஸ்காரர்கள் வெளியில் வந்ததையும் அவர் பார்த்தார். அவர் தம்முடைய சிநேகிதர் டி. எஸ். பி. யின் அருகில் சென்று, "இன்று நீங்கள் செய்த காரியம் எனக்கு வெட்கத்தை உண்டாக்குகிறது. இந்தப் பஞ்சாங்கப் பிராமணர்களை இப்படித் தடியால் அடித்ததில் உங்களுக்கு என்ன திருப்தி? இந்தச் சூரத்தனத்தையெல்லாம் ஜப்பானியரிடம் அல்லவா காட்டவேண்டும்?" என்றார்.

"மிஸ்டர் பிள்ளை! நீங்கள் விஷயம் தெரியாமல் பேசுகிறீர்கள். 'ஸாபோடாஷ்' கோஷ்டியைச் சேர்ந்த ஒரு பையன் இந்த வீட்டுக்கு வந்திருந்ததாகத் தகவல் கிடைத்தது. காவேரிப் பாலத்தை வெடி வைத்து இடிக்கச் சதியாலோசனை நடந்திருக்கிறது..."

"ஆமாம்; காவேரிப் பாலத்தை இடித்து விட்டார்கள்! போங்கள், ஸார்! அவர்களுடைய மூளையைச் சொல்கிறதா? உங்களுடைய அக்கிரமத்தைச் சொல்கிறதா? இப்படியெல்லாம் செய்துதானா இராஜாங்கத்தினிடம் விசுவாசத்தை வளர்த்து விட முடியும்?......சரி! உங்களைச் சொல்லி என்ன பிரயோஜனம்? ...... தேடிய பையன் அகப்பட்டானா?"

"பையன் இந்த வீட்டில் இல்லை. ஆனால் இந்த டவுனிலேதான் இருக்கிறான். எப்படியும் பிடித்து விடுவோம்!" என்றார் டி. எஸ். பி.

மோட்டார் சைக்கிளும், ஜீப்பும், குண்டாந்தடிப் போலீஸும் ஏக ஆர்ப்பாட்டத்துடன் அவ்விடத்திலிருந்து புறப்பட்டுச் சென்றன.

பிறகு வீதியில் நிசப்தம் நிலவியது.

ஆத்மநாதய்யரின் வீட்டுக்குள்ளே லலிதாவின் விம்மல் சத்தம் கேட்டது.

அத்துடன் இரண்டு குழந்தைகளின் அழுகைச் சத்தமும் கலந்தது.

இவ்வாறு சிரஞ்சீவி பாலசுப்பிரமணியனின் ஆண்டு நிறைவுக் கலியாணம் சிறப்பாக முடிவடைந்தது.




அன்றொரு நாள் சென்னையில் ஸ்ரீமான் பொதுஜனத்தைக் கண்டேன்.

"என்ன ஐயா, சௌக்கியமா?" என்று கேட்டேன்.

"அக்கிரமம்!" என்றார் பொதுஜனம்.

நான் திடுக்கிட்டுப் போனேன்.

"என்ன ஐயா, அப்படிச் சொல்லுகிறீர்?" என்றேன்.

"அநியாயம்!" என்றார் அவர்.

எனக்கு ஒன்றும் புரியவில்லை.

"பட்டப் பகல் கொள்ளை!" என்றார் பொதுஜனம் மீண்டும்.

அவருடைய கண்களிலே கோபம் ஜொலித்தது. முகத்திலே ஆத்திரமும் கடுகடுப்பும் காணப்பட்டன. அவரைச் சமாதானப்படுத்தி விஷயத்தைக் கிரகிப்பதற்குள் போதும் போதுமென்றாகி விட்டது எனக்கு.

"அதெப்படி ஐயா, உயர்த்தலாம் பஸ் கட்டணத்தை? அப்படி அவர்கள் என்ன சௌகரியம் செய்து கொடுத்து விட்டார்கள், உயர்த்துவதற்கு?" என்று அவர் பக்கத்திலிருந்த மேஜை மீது ஓங்கி ஒரு குத்துக் குத்திக் கேட்டார்.

"இதற்குத்தான் 'நேஷனலைஸ்' பண்ணுவது என்று பெயரோ?—ரொம்ப லட்சணமாக இருக்கிறது!"

அவருடைய குரல் மேலும் மேலும் உச்சஸ்தாயியில் போய்க் கொண்டே இருந்தது. நான் அவரை மீண்டும் சமாதானப்படுத்தி விட்டு, "ஐயா, பொதுஜனம்! உம்முடைய கோபத்துக்குக் காரணம் என்னவென்பது எனக்கு விளங்குகிறது. ஆனால், நான் சொல்லுவதைக் கொஞ்சம் பொறுமையுடன் கேட்கிறீரா?" என்றேன்.

"சொல்லுமே, சொல்லும்! எல்லோரும் சொல்லுவதைக் கேட்டுக் கேட்டு ஆச்சு; இனி நீர் ஒருவர்தான் பாக்கி; சொல்லும்! சொல்லித் தொலையும்!"

"சென்னை சர்க்கார் பஸ் கட்டணத்தை உயர்த்தியிருப்பது பெருந் தவறுதான். ஆனால்—" என்று சொல்லிவிட்டு நான் நிறுத்தினேன்.

"'ஆனால்' என்ன? சொல்லும் சீக்கிரம்!" என்று ஸ்ரீமான் பொதுஜனம் அவசரப்படுத்தினார்.

"—ஆனால், சர்க்கார் செய்த பெருந் தவறுக்குப் பொது ஜனங்களாகிய நாமும் ஓரளவு உடந்தையாயிருக்கிறோம்."

"என்ன ஐயா, நீர் சொல்லுவது? நாம் எப்படி உடந்தையாயிருக்க முடியும்? பஸ் கட்டணத்தை உயர்த்தும்படி நாமா சொன்னோம்? நீர் சொல்லுவது ஒன்றுமே விளங்கவில்லை!"

"இதோ விளங்க வைக்கிறேன், கேளும்!" என்று சொல்லி விட்டு, அதற்கு முதல் நாள் நடந்த ஒரு சம்பவத்தைக் கூறினேன்.

அன்று காலை நான் காப்பி சாப்பிட்டு விட்டு ஒரு நண்பரைப் பார்க்க வெளியே கிளம்பினேன். மணி பத்து இருக்கும். பஸ் ஸ்டாண்டில் ஒரே கூட்டமாக இருந்தது. அந்தக் கூட்டத்தில் எங்கள் பக்கத்து வீட்டுக்காரப் பையன் ராமுவும் இருந்தான். "வெளியில் எங்கேயோ

போகிறான் போலிருக்கு!'' என்று நினைத்துவிட்டு நான் போய்விட்டேன். நண்பரைக் கண்டு அவருடன் பேசிக் கொண்டிருந்துவிட்டு வீட்டுக்குத் திரும்பும்போது மணி பதினொன்று இருக்கும். அப்போதும் பஸ் ஸ்டாண்டில் கூட்டம் அதிகமாக இருந்தது. ஒரு கோடியிலிருந்து மறு கோடி வரை 'க்யூ' நின்று கொண்டிருந்தது. ராமுவும் அந்தக் 'க்யூ'விலே நின்றுகொண்டிருந்தான். பாவம், அவனுக்கு பஸ்ஸே கிடைக்கவில்லை போலும்! நான் அவன் அருகே போய், "ராமு, எங்கே போகிறாய்?'' என்று அனுதாபத்துடன் கேட்டேன்.

அவன் சிரித்துக்கொண்டே, "எங்கேயும் இல்லை, மாமா! உடுப்பி ஹோட்டலுக்குப் போய்க் காப்பி சாப்பிடப் போகிறேன்!'' என்றான்.

எனக்கு வந்த கோபத்துக்கு அளவே இல்லை. என்ன அக்கிரமம்! உடுப்பி ஹோட்டலுக்கும் அவன் நின்றுகொண்டிருந்த இடத்துக்கும் அரை மைல் தூரம் கூட இராது. அங்கே போவதற்கு பஸ் வேண்டுமாம். அதற்காக ஒருமணி நேரமாக மண்டையை உடைக்கும் வெய்யிலிலே நின்றுகொண்டு இருக்கிறான்!

இந்தச் சம்பவத்தைச் சொல்லிவிட்டு, ஸ்ரீமான் பொதுஜனத்திடம் மீண்டும் நான் கூறியதாவது:

"இப்படி அரை பர்லாங்கு தூரம், ஒரு பர்லாங்கு தூரம் போவதற்குக் கூட பஸ்ஸுக்காகக் காத்துக் கொண்டிருக்கும் வியாதி எங்கள் பக்கத்து வீட்டுக்காரப் பையன் ராமுவை மாத்திரமா பிடித்திருக்கிறது? சென்னை நகரத்திலுள்ள பன்னிரண்டு லட்சம் ஜனங்களையும் அல்லவா பிடித்திருக்கிறது? நிலைமை இப்படியிருக்கும்போது, கட்டணத்தை உயர்த்தி விட்டார்கள் என்பதற்காக ஆத்திரப்பட்டு என்ன பிரயோஜனம்? பஸ் இல்லாமல் ஒரு அடி தூரம்கூடப் போக மாட்டார்கள் இந்தச் சென்னை நகர மக்கள் என்பது சென்னை சர்க்காருக்கு நன்றாகத் தெரிந்திருக்கும்போது, அவர்கள் பஸ் கட்டணத்தை ஏன் உயர்த்த மாட்டார்கள்?

சென்னை நகர மக்களைப் பிடித்திருக்கும் இந்தப் பயங்கரமான வியாதியைப் போக்கவும், சென்னை சர்க்காரை மறுபடி பஸ் கட்டணங்களைக் குறைக்கும்படி செய்வதற்கும் ஒரு வழி உண்டு. அது என்னவென்றால், நடையைக் கட்டுங்கள்! நடையைக் கட்டுங்கள்! — ஐயா, நடையைக் கட்டுங்கள்!''

இதை யெல்லாம் கேட்ட ஸ்ரீமான் பொதுஜனத்துக்குக் கோபம் பொங்கிக் கொண்டு வந்தது. அவர் கேட்டார்: "நடப்பதா? அதெப்படி ஐயா, முடியும்? என்னைக் கேலி செய்கிறீரா?''

"இல்லவே இல்லை; கேலி செய்யவில்லை. உண்மையைத்தான் சொல்லுகிறேன். உமக்குச் சம்பளம் எவ்வளவு?''

"மாதம் எண்பது ரூபாய்!''

"சரி, எண்பது ரூபாய் சம்பளம் வாங்கும் நீர், மாதா மாதம் போக்குவரத்துக்காக ஏறக்குறையப் பத்து ரூபாய் செலவழிப்பது அநியாயம் அல்லவா? அக்கிரமம் அல்லவா? இதை முதலில் ஒப்புக் கொள்ளும்!''

"அதற்கு நான் என்ன செய்வது? காலையில் பதினொரு மணிக்கே ஆபீஸுக்குப் போய்விடவேண்டும். நான் பஸ்ஸில் போகும்போதே பதினொரு மணிக்குச் சரியாகப் போக முடியவில்லை. நடந்து போனால் எப்போது போய்ச் சேருவது?''

"அப்படி வாரும் வழிக்கு! பஸ்ஸை நம்பிக்கொண்டிருந்தால்தான் நீர் காலா காலத்தில் ஆபீஸுக்குப் போக முடியாது. நடந்து போனால் போய்விடலாம்.''

"எப்படி?''

"உம்முடைய ஆபீஸுக்கும் வீட்டுக்கும் எவ்வளவு தூரம் இருக்கும் என்று முதலில் சொல்லும்? இரண்டு அல்லது இரண்டரை மைல் தூரம் இருக்குமா?''

## சர்ச்சிலுக்குப் பரிசு!



சமீபத்தில் சர்ச்சிலுக்குப் பெல்ஜிய நண்பர் ஒருவர் பதினாறு அங்குல நீளமுள்ள சுருட்டு ஒன்றைப் பரிசாக அளித்தார். அது ஆறு மணி நேரம் நீடித்துப் புகையக் கூடியதாம்!

# அவள் தாராளம்!



மனைவி:—பிச்சைக்காரனுக்கு எதற்காக நாலணா போடுகிறீர்கள்?

கணவன்:—பேசாமல் இரு! அந்த நாலணா செல்லாது. அதனாலேதான் போட்டேன்!

மனைவி:—செல்லாத காலணா இருந்தால் போடப்படாதோ!

---

"இருக்கும்."

"பதினொரு மணிக்கு நீர் ஆபீஸுக்குப் போவதற்காக ஒன்பதரை மணி அல்லது பத்து மணிக்கே அவசர அவசரமாகச் சாப்பிட்டுவிட்டு பஸ் ஸ்டாண்டுக்குக் குடல் தெறிக்க ஓடுகிறீர். உடனே உமக்குப் பஸ் கிடைத்து விடுகிறதா? அரை மணி நேரமோ முக்கால் மணி நேரமோ அங்கேயே நின்று பஸ்ஸுக்காகத் தவம் செய்து கொண்டிருக்கிறீர். கடைசியில் எப்படியோ ஒருவகையாக ஒரு பஸ்ஸில் உமக்கு இடம் கிடைக்கிறது. நீர் அதைப் பிடித்து ஆபீஸுக்குப் போகும்போது மணி பதினொன்றுக்கு மேலாகி விடுகிறது. நீர் ஆபீஸுக்கு 'லேட்'டாகப் போகிறீர். ஐயா, கொஞ்சம் யோசித்துப் பாரும்: பஸ்ஸுக்காக முக்கால் மணி நேரம் காத்துக் கொண்டிருந்துவிட்டு அப்புறம் 'லேட்'டாகப் போவது நல்லதா, அல்லது பஸ்ஸின் முகத்திலேயே விழிக்காமல் நடந்து காலாகாலத்தில் ஆபீஸுக்குப் போவது நல்லதா?

பஸ்ஸை நம்பி யிருக்கும் நீர் ஒருநாளாவது 'இன்று நாம் நிச்சயமாக ஆபீஸுக்குப் போய்விடுவோம்' என்று உறுதியாக நம்பமுடிகிறதா? ஆகவே, நீர் நடையைக் கட்டும்!

'ஜம்'மென்று வெற்றிலைப் பாக்குப் போட்டுக் கொண்டு, நீர் எவ்வளவுதான் மெதுவாக நடந்து போனாலுங்கூடப் பதினொரு மணிக்கு நிச்சயமாக ஆபீஸுக்குப் போய்விடலாம்.

மூன்று மைல், நான்கு மைல், ஏன்?— ஐந்து மைல்கூட நாம் தாராளமாக நடக்கலாம்—மனது மாத்திரம் வைத்தால்.

நம்முடைய முன்னோர்கள் இருபது மைல், முப்பது மைல் அலட்சியமாக நடந்ததாகக் கேள்விப்பட்டதில்லையா? இருபது மைல், முப்பது மைல் மாத்திரமா? அவர்கள் காசிக்குப் போனார்கள், கன்னியா குமரிக்குப் போனார்கள்; பூரிக்குப் போனார்கள்; ஜகந்நாதத்துக்குப் போனார்கள். இந்தப் புண்ணிய பரத கண்டம் முழுவதும் கால் நடையாகவே நடந்து யாத்திரை செய்தார்கள். காந்தி மகாத்மா லண்டனில் வசித்த போது தினம் பத்து மைல் நடப்பாராம். பம்பாயிலும் தென்னாப்பிரிக்காவிலும் கோர்ட்டுக்கு நடந்துதான் போவாராம். இதனால்தான் தம்முடைய தேக ஆரோக்கியத்தைக் காப்பாற்றிக் கொண்டதாக அவர் சொல்லி யிருக்கிறார். தினம் தினம் பிரார்த்தனை செய்வதைக் காந்திஜி எப்படி ஒரு கடமையாகக் கொண்டிருந்தாரோ அப்படியே நடப்பதையும் ஒரு கடமையாகக் கொண்டிருந்தார். காந்தி பக்தர்களாகிய நாம் இந்த விஷயத்தில் காந்தி மகான் காட்டிய வழியைக் கடைப்பிடிக்க வேண்டாமா?" என்று ஸ்ரீமான் பொதுஜனத்தைக் கேட்டேன்.

பொதுஜனம் தலையைச் சொறிந்து கொண்டே, "ஆமாம், நீர் சொல்வது நியாயமாகத்தான் படுகிறது!" என்றார்.

"அப்படியானால் இனிமேல் ஆபீஸுக்கு நடந்து போவீரா?"

"நடக்கவேண்டியதுதான். வேறு வழி? மாதம் பத்து ரூபாய் பஸ்ஸுக்காகச் செலவழிக்க முடியுமா?"

"அதுதான் தப்பு. இன்னும் நீர் பணத்தைத்தான் முக்கியமாகக் கருதுகிறீரே யொழிய, நான் சொல்லும் அடிப்படைத் தத்துவத்தைப் புரிந்துகொள்ளவில்லையே!"

ஸ்ரீமான் பொதுஜனம் சிரித்துக் கொண்டே, "புரிந்து கொண்டேன்! புரிந்து கொண்டேன்! ஆனால் எந்தத் தத்துவமும் கொஞ்சம் ரூபாய் அணாப் பைசா கிடைப்பதாக இருந்தால்தானே நன்றாகப் புரியும்!" என்று சொல்லிக் கொண்டே பூந்தமல்லி ஹைரோடு வழியாக நடையைக் கட்டினார்.



# தமிழ் இசைச் சங்கம், சென்னை

## ஆறாவது தமிழ் இசை விழா 1948-49

அரண்மனைக்காரத் தெருவிலுள்ள செயிண்ட் மேரி மண்டபத்தில்

தொடக்க விழா 23—12—48 மாலை 5-30 மணி

திறப்பாளர்: சென்னை பிரதம அமைச்சர் கனம் ஓமந்தூர் இராமசாமி ரெட்டியார் அவர்கள்

வரவேற்புக் கழகத் தலைவர்: திரு சி. என். முத்துரங்க முதலியார் அவர்கள்

| | | |
|---|---|---|
| **1**<br>23—12—48<br>வியாழக்கிழமை<br>மாலை 4-30 மணி | தமிழிசைக் கல்லூரி மாணவ, மாணவிகள் | — பாட்டு |
| **2**<br>24—12—48<br>வெள்ளிக்கிழமை<br>மாலை 5-30 மணி | எம். கே. தியாகராஜ பாகவதர் | — பாட்டு |
| | மைசூர் டி. குருராஜப்பா | — பிடில் |
| | குத்தாலம் சிவவடிவேல் பிள்ளை | — மிருதங்கம் |
| | ஆலங்குடி ராமச்சந்திரன் | — கடம் |
| | மன்னார்குடி நடேச பிள்ளை | — முகர்சிங் |
| **3**<br>25—12—48<br>சனிக்கிழமை<br>மாலை 5-30 மணி | ஜி. என். பாலசுப்பிரமணியம் | — பாட்டு |
| | மாயவரம் கோவிந்தராஜ பிள்ளை | — பிடில் |
| | பழநி எம். சுப்பிரமணிய பிள்ளை | — மிருதங்கம் |
| **4**<br>26—12—48<br>ஞாயிற்றுக்கிழமை<br>மாலை 5-30 மணி | எம். எஸ். சுப்புலட்சுமி | — பாட்டு |
| | மைசூர் டி. சௌடையா | — பிடில் |
| | கல்பாத்தி ராமநாதன் | — மிருதங்கம் |
| | ஆலங்குடி ராமச்சந்திரன் | — கடம் |
| **5**<br>27—12—48<br>திங்கட்கிழமை<br>மாலை 5-30 மணி | மதுரை மணி ஐயர் | — பாட்டு |
| | மாயவரம் கோவிந்தராஜ பிள்ளை | — பிடில் |
| | ராமநாதபுரம் சி. எஸ். முருகபூபதி | — மிருதங்கம் |
| **6**<br>28—12—48<br>செவ்வாய்க்கிழமை<br>மாலை 5-30 மணி | ஆனந்தி—ராதா | — பரதநாட்டியம், அபிநயம் |
| | எம். எஸ். சுப்புலட்சுமி | — பதம் பாடுவார்கள் |
| **7**<br>29—12—48<br>புதன்கிழமை<br>மாலை 5-30 மணி | செம்பை வைத்தியநாத பாகவதர் | — பாட்டு |
| | மைசூர் டி. சௌடையா | — பிடில் |
| | பழநி எம். சுப்பிரமணிய பிள்ளை | — மிருதங்கம் |
| | மஞ்சுநாதன் | — கடம் |
| **8**<br>30—12—48<br>வியாழக்கிழமை<br>மாலை 5-30 மணி | என். சி. வஸந்தகோகிலம் | — பாட்டு |
| | ஆர். எஸ். கோபாலகிருஷ்ணன் | — பிடில் |
| | பாலக்காட்டு கே. குஞ்சுமணி | — மிருதங்கம் |
| | ஆலங்குடி ராமச்சந்திரன் | — கடம் |
| **9**<br>31—12—48<br>வெள்ளிக்கிழமை<br>மாலை 5-30 மணி | கே. பி. சுந்தராம்பாள் | — பாட்டு |
| | ராமநாதபுரம் எம். என். கணேசன் | — பிடில் |
| | புதுக்கோட்டை தட்சிணாமூர்த்தி ஆச்சாரி | — மிருதங்கம் |
| | ஆறுமுகம் பிள்ளை | — கஞ்சிரா |
| | ஆலங்குடி ராமச்சந்திரன் | — கடம் |
| **10**<br>1—1—49<br>சனிக்கிழமை<br>மாலை 5-30 மணி | சித்தூர் சுப்பிரமணிய பிள்ளை | — பாட்டு |
| | பி. கே. விஸ்வநாத சர்மா | — பிடில் |
| | டி. கே. மூர்த்தி | — மிருதங்கம் |
| | மன்னார்குடி வைத்தியலிங்கம் பிள்ளை | — கொன்னக்கோல் |
| **11**<br>2—1—49<br>ஞாயிற்றுக்கிழமை<br>மாலை 5-30 மணி | எம். எம். தண்டபாணி தேசிகர் | — பாட்டு |
| | வி. கோவிந்தசாமி நாயக்கர் | — பிடில் |
| | மதராஸ் ஏ. கண்ணன் | — மிருதங்கம் |
| | டி. என். வில்வாத்திரி ஐயர் | — கடம் |
| | மன்னார்குடி நடேச பிள்ளை | — முகர்சிங் |

கட்டணம்:—சீசன் முதல் வகுப்பு ரூ. 30-0-0: இரண்டாம் வகுப்பு ரூ. 22-8-0

சீசன் டிக்கட்டுகள் தமிழ் இசைச் சங்கக் காரியாலயத்தில் (8-9, லிங்கன்ன நாயக்கன் தெரு, சென்னை 1) கிடைக்கும் ஆதரவாளர்கள் குறைந்த கட்டணத்தில் சீசன் டிக்கட்டுகள் சங்கக் காரியாலயத்தில் மட்டும் பெற்றுக் கொள்ளலாம். குழந்தைகளுக்கு அரைக் கட்டணம் வசூலிக்கப்படும்

ஒலிபெருக்கி ஏற்பாடு:—அசோசியேட்டட் ரேடியோ ஏஜன்சிஸ், தெப்பக்குளம், திருச்சி

# வாழ வழியில்லை!

**விந்தன்**

கடைசி கடைசியாக எங்களுக்கு அப்படித்தான் தோன்றிற்று. அதாவது, "நாங்கள் இந்த உலகத்தில் வாழ வழியில்லை!" என்று!

என்ன, 'எங்களுக்கு' என்று சொன்னேன்?—இல்லை, இல்லை; எனக்குத்தான்!

இந்தத் தீர்மானத்துக்கு நான் திடீரென்று வந்துவிடவில்லை; எவ்வளவு தூரம் முடியுமோ, அவ்வளவு தூரம் தீர்க்காலோசனை செய்த பிறகுதான் வந்தேன்.

"இதை அவளிடம் இன்றே சொல்லிவிட வேண்டும்—சொல்லுவதாவது! எழுதிவிட வேண்டும்."

இந்த எண்ணம் தோன்றியதும் ஒரு நிமிஷம்கூட நான் தாமதிக்கவில்லை; தாமதித்ததெல்லாம் போதும் என்று உடனே ஒரு காகிதத்தை எடுத்தேன்; விஷயத்தை 'விறுவிறு' வென்று எழுதினேன்; அதை உறைக்குள் போட்டுத் திணித்துத் தபாலில் சேர்த்தேன்.

அப்புறந்தான் என்னால் வேறு காரியம் பார்க்க முடிந்தது!

கடிதத்தில் "மொட்டைத் தாதன் குட்டையில் விழுந்தான்!" என்று வெறுமனே எழுதிவிடவில்லை. "ஏன் விழுந்தான், எப்படி விழுந்தான்?" என்றெல்லாம் விவரித்துத்தான் எழுதினேன். ஏன் தெரியுமா? என்னுடைய பேச்சுக்கு எதிர்ப்பேச்சு இன்றி அவள் அப்படியே என்னுடைய தீர்மானத்தை அங்கீகரித்துவிட வேண்டும் என்ற எண்ணம்தான்!

ஆனால், என்ன கஷ்டம் பாருங்கள்; அதுதான் அவளிடம் நடக்கவில்லை!

எல்லாவற்றையும் பொறுமையுடன் படித்துவிட்டு அவள் எனக்கு என்ன எழுதியிருந்தாள், தெரியுமா?—அதை ஏன் கேட்கிறீர்கள், போங்கள்!

இத்தனைக்கும் அவள் எழுதியிருந்தது ஒரே ஒரு வார்த்தைதான். அந்த ஒரு வார்த்தை—அந்த ஒரே ஒரு வார்த்தை—என்னை என்ன தாக்குத் தாக்கிவிட்டதென்கிறீர்கள்! — அப்பப்பா! பொல்லாதவர்கள் ஐயா, இந்தப் பெண்கள்! மிகமிக மிகப் பொல்லாதவர்கள்!

அவள் எழுதியிருந்த அந்த வார்த்தையைப் படித்த பிறகு எனக்கே என்னுடைய தீர்மானத்தில் சந்தேகம் வந்துவிட்டது. எனக்கு மட்டும் என்ன? என்னுடைய கதையைக் கேட்டால் உங்களுக்கே அந்தச் சந்தேகம் தோன்றினாலும் ஆச்சரியப்படுவதற்கு ஒன்றுமில்லைதான்!

*

அந்தச் சங்கத்தின் பெயர் இன்னதென்று எனக்கு இப்பொழுது ஞாபகமில்லை. ஆனால், பல பெண்கள் ஒன்று சேர்ந்து ஏதோ கூத்தடிக்கும் சங்கம் அது என்பது மட்டும் என்னுடைய நினைவில் இன்னும் தங்கியிருக்கிறது. அந்தச் சங்கத்துக்கு அவள் காரியதரிசி. அதற்கு ஒரு சமயம் வருடாந்தர விழா நடந்தபோது, அதில் என்னைப் பேசுவதற்கு அவள் அழைத்திருந்தாள்.

பெண்களுக்கு மத்தியில் போய்ப் பேசுவதற்கு எனக்கு முதலில் கொஞ்சம் வெட்கமாயிருந்தது. ஆகவே, "எனக்குப் பதிலாக யாராவது ஒரு பெரியவரை அழைத்துப் பேசச் சொல்லுங்கள்!" என்று எழுதினேன். அதற்கு அவள் கன்னத்தில் அடித்தாற்போல், "நாங்கள் பாட்டிமார்களல்ல; நீங்களே வாருங்கள்!" என்று எழுதினாள்!

அதற்கு மேல் என்னால் ஒன்றும் சொல்ல முடியவில்லை. அடக்க ஒடுக்கத்துடனும் பயபக்தியுடனும் சென்று அந்த மாதர் மகாசபையில் பேசினேன். விழாவில் கலந்து கொண்ட பிறகு அதுவரை என்னைப் பிடித்திருந்த வெட்கமும் போன இடம் தெரியாமல் போயே போய்விட்டது. எல்லாம் இடத்தின் விசேஷம் என்று வைத்துக் கொள்ளுங்களேன்!

காரியதரிசி வந்தனோபசாரம் கூறியதும் என்னை வழியனுப்ப வந்தாள். வாசலைக் கடந்ததும், "தங்களுடைய பிரசங்கம் ரொம்ப ஜோர்! ரொம்ப ரொம்ப ஜோர்! எனக்கு மிகவும் பிடித்திருந்தது!" என்றாள்.

இதைச் சொல்லிவிட்டு அவள் ஒரு காரணமுமின்றிச் சிரித்தது, என்னை என்னவோ செய்தது. அதன் காரண

மாகத்தானே என்னவோ, "நல்ல வேளை! என்னுடைய பிரசங்கத்தை மட்டுந்தானே தங்களுக்குப் பிடித்தது?" என்று நான் கொஞ்சம் கிருதக்காகக் கேட்டுவிட்டேன்.

அவள் சளைக்கவில்லை; "உங்களையுந் தான்!" என்று சொல்லிவிட்டு எடுத்தாள் ஓட்டம்!

அவ்வளவுதான்; அன்றைய தினத்தி லிருந்து நான் அவளுடைய காதலனானேன், அவள் என்னுடைய காதலியானாள்!

இருவருக்கும் கடிதப் போக்குவரத்து வருஷக் கணக்கில் நீடித்தது. அப்படி நீடித்ததற்குக் காரணம், எங்களுடைய 'காதல் பிரச்னை'யில் இருந்த ஒரு சிக்கல் தான். அந்தச் சிக்கல் அப்படியொன்றும் அற்ப சொற்பமானதுமல்ல; அகில உலகத்தையும் இன்று வரை ஆட்டி வைத்துக் கொண்டிருப்பது!

அப்படிப்பட்ட சிக்கல்தான் என்ன என்று கேட்கிறீர்களா? — அவள் ஒரு ஜாதி, நான் ஒரு ஜாதி!

இந்த ஜாதி வித்தியாசம் எங்களுக்கு ஏற்கெனவே தெரிந்திருக்கத்தான் செய்தது. அதாவது, எப்படித் தெரிந்திருந்தது என்கிறீர்கள்? நான் ஆண் ஜாதி என்றும் அவள் பெண் ஜாதி என்றும் தெரிந்திருந்தது!

எங்களுக்குத் தெரிந்த இந்த லட்சணத்தை எங்களுடைய பெற்றோர்கள் ஒப்புக் கொள்ளவில்லை; நண்பர்கள் ஒப்புக் கொள்ள வில்லை; உறவினர்கள் ஒப்புக் கொள்ளவில்லை; ஊராரும் உலகத்தாரும் ஒப்புக் கொள்ளவில்லை!

★

எங்கள் காதலுக்கு உவமை சொல்ல வேண்டுமானால் சந்திரனைத்தான் சொல்ல வேண்டும். ஏனெனில், எங்கள் காதல் சில சமயம் வளர்பிறை போல் வளர்வதும் உண்டு; சில சமயம் தேய்பிறை போல் தேய்வதும் உண்டு. இந்த வளர்ச்சியும் தேய்வும் அநேகமாக அடிக்கடி மாறும் எங்களுடைய மனோபாவத்தைப் பொறுத்தே இருந்தன.

ஒரு சமயம் நாங்கள் நினைப்போம்—"இந்த உலகமே எதிர்த்து நின்றாலும் நாம் நம்முடைய காதலைக் கை விடக் கூடாது" என்று; இன்னொரு சமயம் நினைப்போம்—"இந்த உலகத்தை வெறுத்துக் கொண்டு நாம் தனியாக இருந்து என்னத்தைச் செய்வது?" என்று!

இப்படியாக எங்களுடைய மனம் பேதலித்து நின்றாலும், அவற்றையும் அறியாத ஏதோ ஒன்று எங்களை விடாப் பிடியாகப் பிடித்து வைத்துக் கொண்டிருந்தது. அது நாங்கள் பரஸ்பரம் கடிதம் எழுதிக்கொள்வ தோடு திருப்தியடையவில்லை; அடிக்கடி நேரில் சந்திக்க வேண்டுமென்றும், அளவளாவ வேண்டுமென்றும், அன்புடன் இறுகத் தழுவி ஆனந்தபாஷ்பம் சொரிய வேண்டுமென்றும் அந்தச் சக்தி எங்களைத் தூண்டி வந்தது.

இந்தத் தூண்டுதலினால், ஒரு முறை அவளை என் வீட்டுக்கே வா என்று நான் துணிந்து அழைத்துவிட்டேன்!

அவள் வந்தாள்; வந்து, வாசலில் நின்றாள். நான் அவளைப் பார்த்தேன்; அவள் என்னைப் பார்த்தாள். நான் புன்னகை புரிந்தேன்; அவளும் புன்னகை புரிந்தாள்.

அந்த ஒரு கணத்திற்குப் பிறகு...?

அப்பா பார்த்துவிட்டால்...? அண்ணா பார்த்துவிட்டால்...? அம்மா பார்த்து விட்டால்...? அக்கா பார்த்துவிட்டால்...?

இப்படி அடுத்தடுத்துப் பல கேள்விகள் அடுக்கடுக்காக என் உள்ளத்தில் எழுந்தன. அவ்வளவுதான்; என் கண்களில் நீர் நிறைந்தது; கால்கள் தரையில் பாவவில்லை; தடுமாறின!

ஏன் இந்த நடுக்கம்? அப்பா அம்மா, அண்ணா அக்கா எல்லோரும் என்னுடைய ஜன்ம விரோதிகளா, என்ன?—விரோதிகள் இல்லையென்றால் எனக்குப் பிடித்தமான அவளை என் வீட்டுக்குள் அழைக்க என்னால் ஏன் முடியவில்லை?

இந்நிலையில் ஆவலுடன் என்னிடம் ஏதோ சொல்லத் துடித்த அவள், அசடு வழியும் என் முகத்தைக் கண்டதும் திடுக்கிட்டு நின்றாள்!

நானோ எப்படியாவது ராஜ விழி விழிப்ப தென்று தீர்மானம் செய்து கொண்டு, அதற்காகப் பெரும் பிரயத்தனம் செய்து பார்த்தேன்!

முடியவில்லை; அவள் திரும்பிப் போனாள்!

★

அடுத்தபடி, எனக்கென்று நான் தனியாக எங்கேயாவது ஓர் அறையை வாடகைக்கு அமர்த்திக் கொள்வதென்றும், அந்த அறைக்கு அடிக்கடி அவள் வந்து என்னைச் சந்தித்துவிட்டுச் செல்வதென் றும் எங்களுக்குள் தீர்மானமாயிற்று. அதன் படியே நானும் படாத பாடு பட்டு ஓர் அறையை வாடகைக்குப் பிடித்தேன்.

அவள் வந்தாள்; வந்து, எனக்கு எதிரே யிருந்த நாற்காலியில் அமர்ந்தாள்.

நான் கதவைச் சாத்தித் தாளிடப் போனேன்.

"பிறருடைய கவனத்தைக் கவருவதற்கு வேறு வினை வேண்டியதில்லை!" என்றான் அவன்.

எனக்கும் அது உண்மையாகப் பட்டது. கதவைத் தாளிடாமல் வெறுமனே சாத்தி விட்டு வந்து உட்கார்ந்து, அவனுடைய மிருதுவான கரத்தை மெல்லப் பற்றினேன்.

அவன் என் உடலையும் உயிரையுமே தன் வசப்படுத்திக்கொள்ளக் கூடிய ஒரு மந்திரச் சிரிப்பால் என்னைக் காந்தம்போல் கவர்ந்து இழுத்தான்!

நான் அவனுடைய கரத்தைக் கொஞ்சம் அழுத்திப் பிடித்து, "அப்பா! இதற்காக நாம் எவ்வளவு நாட்கள் காத்திருக்கவேண்டியிருந்தது!" என்று சொல்லிப் பெருமூச்சு விட்டேன்.

"ஒரு சாண் மஞ்சள் கயிற்றை எடுத்து என்னுடைய கழுத்தில் கட்டிவிட்டால், இப்படியெல்லாம் நாம் தவிக்க வேண்டியதே யில்லை!" என்றான் அவன்.

"அதைக் காதும் காதும் வைத்தாற்போல் ரகசியமாகக் கட்டிவிட முடியுமா, என்ன?" என்றேன்.

அதற்குள், "என்னடா, கதவைச் சாத்திக்கொண்டு.....?" என்று கேட்டுக் கொண்டே, எதிர்பாராத விதமாக வந்து சேர்ந்தான் நண்பன் நாராயணன்.

இருவரும் திடுக்கிட்டு அவனைத் திரும்பிப் பார்த்தோம்.

"ஹோ!" என்று அவன் ஒரு தினுசாக நீட்டி முழக்கிக் கொண்டே வெளியே சென்றான். அவன் வெளியே சென்றதும் 'களுக்' என்ற சிரிப்பொலி எங்கள் காதில் விழுந்தது!

"என்னுடைய நண்பன் எப்படிப்பட்டவன், தெரியுமா? கோயபெல்ஸின் திரு அவதாரம்!" என்றேன் நான்.



"பார்த்தாலே தெரிகிறதே! இங்கிலீஷ்காரனிடமிருந்து ஹாட்டும் சூட்டும் போடக் கற்றுக்கொண்ட மனிதன், அவனிடமிருந்து கொஞ்சம் ஒழுங்கும் கற்றுக் கொண்டிருக்கக் கூடாதா?" என்றான் அவன்.

எனக்கு ஒன்றும் புரியவில்லை. "அது என்ன ஒழுங்கு?" என்று கேட்டேன்.

"இங்கிலீஷ்காரன் இப்படியா 'திடுதிப்' என்று பிறத்தியாருடைய அறைக்குள் நுழைவான்? கதவைத் தட்டிக் கொண்டு வெளியிலே அல்லவா நிற்பான்? உள்ளே இருப்பவர்கள் 'வா' என்று சொல்வதற்கு முன்னால் அவன் வரவே மாட்டானே!" என்றான் அவன்.

"அந்த வழக்கம் இங்கிலாந்தில்தானே?" என்றேன்.

"ஏன், இந்தியாவில் மட்டும் யாராவது வேண்டாமென்கிறார்களாக்கும்!" என்று சொல்லிக்கொண்டே எழுந்து அவன் நடையைக் கட்டினான்; நான் தடுக்கவில்லை!

நண்பன் நாராயணனுக்குப் பிறகு வேறு யாராவது வருவதற்கு முன்னால், அவன் அங்கிருந்து போய்விட வேண்டுமே என்று நான் தவியாய்த் தவித்துக் கொண்டல்லவா இருந்தேன்!

★

இந்தச் சோதனைக்குப் பிறகு என் உள்ளத்தில் புயல் வீச ஆரம்பித்துவிட்டது. நண்பன் நாராயணனைப் பார்த்து, அவனை எனக்கு முன் பின் தெரியாதென்றும், அன்று, தான் நடிக்கப் போகும் உதவி நாடகம் ஒன்றுக்கு டிக்கெட் விற்பதற்காக என்னைத் தேடி வந்திருந்தானென்றும் ஒரு மகத்தான பொய்யைச் சிருஷ்டித்துச் சொன்ன பிறகுதான் என் மனம் ஒருவாறு நிம்மதியடைந்தது.

அதற்குப் பிறகாவது நாங்கள் 'சும்மா இருப்பதே சுகம்' என்று இருந்துவிட்டோமோ என்றால், அதுதான் இல்லை!

இன்னதென்று தெரியாத அந்தச் சக்தி எங்களை மீண்டும் ஆட்டுவித்தது; நாங்கள் ஆடினோம்!

அதன்படி, மூன்றாவதாக இருவரும் ஏதாவது ஒரு பொது இடத்தில் சந்திப்பதென்று முடிவுக்கு வந்தோம். அன்று மாலை ஆறரை மணிக்குக் குறிப்பிட்ட சினிமா ஒன்றுக்குச் செல்வதென்றும், ஒருவரை யொருவர் எதிர்பாராமலே மேல் வகுப்புக்குச் சென்று விடுவதென்றும் தீர்மானித்தோம்.

என்னத்தைச் சொல்ல?—நான் ஸினிமாவுக்குச் சென்றது அதுதான் முதல் தடவையல்ல; எத்தனையோ தடவை சென்றிருக்கிறேன். அவ்வாறு சென்றபோதெல்லாம், "எனக்குப் பின்னால் யார் வருகிறார்கள், என்னைச் சுற்றி யார் யார் நிற்கிறார்கள்?" என்றெல்லாம் நான் கவனித்ததே கிடையாது. அன்று என்னடா என்றால், என்னுடைய கவனமெல்லாம் எனக்குப் பின்னால் வந்தவர்கள் மீதும், என்னைச் சுற்றி நின்றவர்கள் மீதுமே சென்றது!

"இதென்ன சங்கடம்!" என்று எண்ணிக் கொண்டே டிக்கெட்டை வாங்கினேன். மாடிப் படி ஏறியதும் எனக்குப் பின்னால் 'தட தட' வென்ற சத்தம் கேட்டது. "நம்மை யார் தொடர்ந்து வருகிறார்கள்?" என்று திரும்பிப் பார்த்தேன். யாருமில்லை; படிகள் மரப் படிகளாதலால் நான் ஏறியபோது கேட்ட சத்தம் அது!

எனக்கு முன்னாலேயே அவன் வந்து அங்கே உட்கார்ந்திருந்தான். நான் சிரித்துக் கொண்டே சென்று அவன் பக்கத்தில் அமர்ந்தேன்.

"ஏன் சிரிக்கிறீர்கள்?" என்று கேட்டான்.

"ஒன்றுமில்லை!" என்று மழுப்பிவிட்டுச் சுற்றுமுற்றும் பார்த்தேன். எங்கள் இருவரைத் தவிர அங்கு வேறு யாருமே இல்லை!

அந்த விஷயம் எனக்கு மிகவும் சந்தோஷமாய்த்தான் இருந்தது. "இன்றைக்காவது மனம் விட்டுப் பேசலாம்" என்று எண்ணிக் கொண்டேன்.

அடுத்த நிமிஷம் அதற்கும் வந்தது ஆபத்து! எங்கிருந்தோ பத்துப் பன்னிரண்டு பேர் ஒருவர் பின் ஒருவராக வந்து சேர்ந்தார்கள். வந்தவர்களுக்கு உட்கார இடமா இல்லை? எங்களுக்குச் சற்றுத் தூரத்தில் எவ்வளவோ இடம் இருக்கத்தான் செய்தது. ஆயினும் அவர்கள் அனைவரும் எங்களைச் சுற்றியிருந்த இடங்களிலேயே உட்கார்ந்தார்கள்!

எங்களுடைய வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்ள வேண்டுமென்பதில்தான் இந்த ஜனங்களுக்கு எவ்வளவு ஆர்வம்! ஏழேழு ஜன்மத்துக்கும் தொடர்ந்து வரும் என்கிறார்களே, அந்தப் பாவத்தைப் போலல்லவா இவர்கள் எங்கு சென்றாலும் எங்களை விடாமல் தொடர்ந்து வந்து தொலைகிறார்கள்!

எங்களுக்கு வந்த ஆத்திரத்தில் அவர்களையெல்லாம் வாயாரத் திட்ட வேண்டும்போல் இருந்தது. ஆனால் அத்தனை பேருக்கு மத்தியில் அது சாத்தியமா? ஆகவே, அவர்களை மனமாரத் திட்டிக்கொண்டு பேசாமல் உட்கார்ந்திருந்தோம்.

படம் முடிந்ததும் ஒருவரையொருவர் எதிர்பார்க்கவில்லை; 'பதவிசு'கள் போல அவரவர்களுடைய வீட்டை நோக்கி நடையைக் கட்டிவிட்டோம்.

★

அன்றிரவுதான் விடிய விடிய நான் யோசித்தேன்; அப்படியும் இப்படியுமாக நாறு நடை நடந்த வண்ணம் யோசித்தேன்; கட்டிலில் உட்கார்ந்து வீட்டு முகட்டைப் பார்த்த வண்ணம் யோசித்தேன்; மல்லாந்து படுத்துக் கொண்டும் மண்டையைக் குடைந்து கொண்டும் யோசித்தேன். அதன் பயனாகத்தான் ஆரம்பத்தில் குறிப்பிட்டிருந்த தீர்மானத்துக்கு நான் வந்தேன். அதாவது, "நாங்கள் இந்த உலகத்தில் வாழ வழியில்லை!" என்று!

உடனே என்னுடைய தீர்மானத்தை அவனுக்கு எழுதினேன்—வருத்தத்துடன்தான்!

என்னுடைய வருத்தத்தை அவன் பொருட்படுத்தவில்லை. அதற்குப் பதிலாக, "இந்தப் பாழ் உலகத்தில் நாம் வாழ வழியா இல்லை? வழி இருக்கத்தான் இருக்கிறது. ஆனால், உங்களுக்கு என்மீது காதல்தான் இல்லை!" என்று அவன் எழுதியிருந்தான்!

இதைப் படித்ததும் எனக்குச் 'சுருக்' கென்றது!

என்ன அக்கிரமம், இது!—எவ்வளவு பொல்லாதவன், அவன்!

எனக்கு அவன் மீது காதல் இல்லையாமே!

ஒருவேளை அவன் சொல்வதும் உண்மையாயிருக்குமோ!—அவ்வளவுதான்; என்னுடைய தீர்மானத்தில் எனக்கே சந்தேகம் வந்துவிட்டது. அப்படியே அசந்து உட்கார்ந்துவிட்டேன். உட்கார்ந்து, வெகுநேரம் ஆழ்ந்து யோசித்தேன்—ஆம். அவன் சொன்னது உண்மை; முற்றிலும் உண்மை; முக்காலும் உண்மை!

அவன்மீது எனக்கு உண்மையிலேயே காதல் இருந்தால், அந்தக் காதல் எந்தச் சக்தியைத்தான் எதிர்த்து நிற்காது?

# காலக்ஷேபம்

### எப்படி ?

ஒரு பங்களாவில் மின்சார விளக்குப் போடுவதற்குத் தொழிலாளிகள் வேலை செய்துகொண்டிருந்தனர்.

ஒருவன் (மாடி மூகப்பில் நின்றுகொண்டு இன்னொரு தொழிலாளியைப் பார்த்து) :—தம்பி, இந்த இரண்டு 'ஒயர்'களையும் சேர்த்துப் பிடித்துக் கொள்.

அவன் :—ஆகா, இதோ !

ஒருவன் :—அது ஒன்றும் செய்யவில்லையா ?

அவன் :—இல்லையே !

ஒருவன் :—சரிதான்; இந்த ஒயர்களைத் தொட்டால் ஒன்றும் செய்யாது என்று இப்பொழுதல்லவா எனக்குத் தெரிகிறது !

★

### அவர் பார்த்தது!

நீதிபதி (சாட்சியைப் பார்த்து):—கொலை நடந்தபோது நீர் என்ன பார்த்தீர் ?

சாட்சி (எழுத்தாளர்):—அப்போது இரவு மணி பன்னிரண்டு இருக்கும். ஆந்தையின் அலறல் அந்தப் பயங்கரமான கள்ளிரவின் அமைதியைப் பரிகசித்துக்கொண்டிருந்தது. எங்கும் காரிருள் கவிந்திருந்தது. மரண அமைதி சூழ கொண்டிருந்த அச்சமயம்....

நீதிபதி:—போதும், போதும்!

★

### பதிலுக்குப் பதில் !

வீட்டுச் சொந்தக்காரர் (குடியிருக்க வருபவரிடம்):—ஸார், நான் இப்போதே சொல்லிவிடுகிறேன். என் வீட்டில் குடியிருக்க வருகிறவர்களிடம் குழந்தைகள், பூனை, நாய், கிளி, ஹார்மோனியம், ரேடியோ இவைகளில் எது இருந்தாலும் எனக்குப் பிடிக்காது. தெரிகிறதா ?

குடியிருக்க வருபவர்:—தெரிகிறது. நானும் ஒரு சமாசாரம் இப்போதே சொல்லி விடுகிறேன். என்னால் உங்களுக்கு ஒரு தொந்தரவும் இருக்காது. ஆனால் ஒரு விஷயம், என் பவுண்டன் பேனா எழுதும்போது கொஞ்சம் 'கிர், கிர்' என்று சத்தம் கேட்கும். அது பாதகமில்லையே!

### நல்லது வேண்டாம்!

"எனக்குச் சுந்தரத்தைப் பற்றி விசேஷமாக ஒன்றும் தெரியாது. அவன் ரொம்ப நல்லவன் என்றுதான் எனக்குத் தெரியும்."

"அப்படியானால் நாம் வேறு யாரைப் பற்றிப் பேசலாம் ?"

★

### தேடிக் கொடுத்தான் !

அம்மா:—முத்து, நான் ஜன்னல் வழியாகப் பார்த்தேன்; நீ பக்கத்து வீட்டுப் பையனோடு கட்டிப் பிடித்து விளையாடினாய். பிறகு அவனுடைய காணாமற்போன கோலிகளை எடுத்து அவன் கையில் கொடுத்தாய்! அப்படித்தான் பிறருக்கு உதவி செய்ய வேண்டும். ரொம்ப சந்தோஷம்.

முத்து :—இல்லை, அம்மா ! அவை கோலிகள் அல்ல. எங்கள் இரண்டு பேருக்கும் ஏற்பட்ட சண்டையில் அவனை நான் பலமாக முகத்தில் குத்தி விட்டேன். அப்போது கீழே விழுந்த பற்களைத்தான் தேடி எடுத்து அவனிடம் கொடுத்தேன் !

★

### நல்ல கவனம் !

டாக்டர் (நோயாளியைப் பரிசோதித்து விட்டு):—நேற்றைய தினத்தை விட இன்றைக்கு உங்கள் உடல் நிலை அபிவிருத்தி யடைந்திருக்கிறது.



நோயாளி:—ஆமாம், நீங்கள் கொடுத்த மருந்து சீசாவில் இருந்த குறிப்பைக் கவனித்து அதன்படி நடந்தேன்.

டாக்டர்:—என்ன குறிப்பு அது ?

நோயாளி:—'சீசாவை அழுத்தமாக மூடி வைக்கவும்' என்று எழுதியிருக்கிறதே !



# மந்திரவாதி பிழைத்தான்!

....விஜயம்....

அன்று அந்தக் கழுதைக்கு நல்ல ஆகாரம் கிடைத்தது. விதம் விதமான நோட்டுப்புத்தகங்களும் பல வர்ணக் காகிதங்களும் அநேகம் பழைய டைரிகளும் கிடைத்தன. கழுதைக்கு இருந்த பசியில் அது அந்தக் குப்பைத் தொட்டியையே சாப்பிட்டு விட்டிருக்கும்; போனால் போகிறதென்று குப்பைத் தொட்டியை மட்டும் விட்டு விட்டது!

சாப்பிட்டு முடிந்ததும் கழுதை ஏப்பம் விடுவதற்கு வாயைத் திறந்தது. உடனே அதற்கு மனிதர்கள் மாதிரி பேச வந்து விட்டது. கழுதைக்குச் சந்தோஷம் ஒரு புறம், ஆச்சரியம் ஒரு புறம். உடனே அது உற்சாகத்துடன் ஓடி ஒரு ஹோட்டலருகே போயிற்று. அநேக நாட்களாக மனிதர்களைப் போலத் தானும் ஹோட்டலுக்குப் போய் நல்ல சிற்றுண்டி சாப்பிட வேண்டும் என்று ஆசை. சாதாரணக் கழுதையாயிருந்தால் ஹோட்டலுக்குள் போக முடியாது. இப்பொழுதுதான் அதற்கு மனிதர்களைப் போலப் பேசத் தெரியுமே! தைரியமாக ஹோட்டலுக்குள்ளே நுழைந்தது.

"ஒரு மசாலா தோசையும், ஒரு கப் காப்பியும் கொண்டு வா!" என்று நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு கழுதை உரத்த குரலில் கேட்டது.

ஹோட்டலில் பரிமாறுபவன் மனிதன் மாதிரி பேசும் கழுதையைக் கண்டதும் அலறிப் புடைத்துக் கொண்டு வெளியே ஓடிவிட்டான். ஹோட்டலில் இருந்த மற்றவர்களும் பயந்து நடுங்கி வெளியே ஓடி விட்டனர். கழுதை சந்தோஷத்துடன் உள்ளே புகுந்து வேண்டிய மட்டும் பக்ஷணங்களைத் தின்றுவிட்டுக் காப்பியையும் குடித்தது.

பிறகு அங்கிருந்து கழுதை புறப்பட்டு ரயில்வே ஸ்டேஷனுக்குப் போயிற்று. டிக்கெட் விற்கும் அறையின் ஜன்னலண்டை போய், "எழும்பூருக்கு ஒரு டிக்கெட்!" என்று கேட்டது. டிக்கெட் விற்கும் குமாஸ்தா ஜன்னல் வழியாகக் கழுதையைப் பார்த்தான்; அது பேசுவதையும் கேட்டான். அவ்வளவுதான்; அவன் பயத்தினால் உளறிக் கொட்டிக் கொண்டு வெளியே ஓடி விட்டான். பிறகு கழுதை காலியாயிருந்த ஒரு குட்ஸ் ட்ரெயினில் ஏறிக் கொண்டது. அந்த வண்டி எழும்பூர் வரையில் போய் நின்றது. கழுதை அங்கே போய் இறங்கிக் கொண்டது.

தன் இஷ்டப்படி கழுதை அன்று எங்கெல்லாமோ சுற்றியது. அந்தப் பேசும் கழுதையைக் கண்டு பயப்படாதவர்களே இல்லை. ஒரு பெரிய புஸ்தகக் கடைக்குள் புகுந்து அது புஸ்தகங்களை வேறு தின்று தீர்த்து விட்டது. கழுதை புகுந்தவுடனேயே புஸ்தகக் கடைக்காரர் பயந்து வெளியே ஓடிவிட்டார்!

கழுதைக்கு ஏற்கெனவே வயிறு நிரம்பியிருந்தது. மேலும் மேலும் தின்றுகொண்டே போனதனால் கழுதையினால் ஒரு அடிகூட எடுத்து வைக்க முடியவில்லை. ஆகவே, அது அங்கிருந்த ஒரு மரத்தின் நிழலில் படுத்துக்கொண்டு விட்டது.

அன்று காலையிலிருந்து வண்ணான் கழுதையைத் தேடிப் பார்த்து அலுத்துப் போய்விட்டான். கடைசியில்

துணிகளை யெல்லாம் தானே எடுத்துக் கொண்டு துறைக்குப் புறப்பட்டான். போகிற வழியி லெல்லாம் தன் கழுதையைத் தேடிக்கொண்டே போனான். வழியில் அந்தக் கழுதை பேசும் சக்தி பெற்றுச் செய்யும் அட்டகாசத்தையெல்லாம் சிலர் அவனிடம் சொன்னார்கள். வண்ணானுக்கு அவற்றையெல்லாம் நம்பவே முடியவில்லை.

துணி மூட்டையைத் தூக்கிக் கொண்டு அவன் ஒரு மைல் தூரம் போயிருப்பான்; அங்கே அவன் கழுதை நன்றாய்த் தின்றுவிட்டு மரத்தடியில் சுகமாய்த் தூங்குவதைப் பார்த்தான்.

வண்ணானுக்கு வந்த ஆத்திரம் சொல்லி முடியாது. தன் முழு பலத்தையும் செலுத்திக் கையிலிருந்த தடியினால் கழுதையின் முதுகில் நாலு வாங்கு வாங்கினான்.

கழுதை அலறிப் புடைத்துக் கொண்டு எழுந்து நின்றது. எஜமானிடம் தன் பேச்சுச் சக்தியைக் காட்டிப் பயமுறுத்த வேண்டும் என்று நினைத்து அது பேச முயன்றது. ஆனால் பேச்சு வரவில்லை. அதற்குப் பதிலாகத் தொண்டைக்குள் சிக்கிக் கொண்டிருந்த ஏதோ ஒன்று வெளியே வர முயற்சி செய்தது. கழுதை துள்ளிக் குதித்து வெகு சிரமப்பட்டு அதை வெளியே கக்கிவிட்டது.

அந்த வஸ்து ஒரு சின்னப் புஸ்தகம். அந்தப் புஸ்தகம் கீழே விழுந்ததும் மறைந்து விட்டது. அதற்குப் பதலாக அங்கே குபீர் என்று ஒரு மந்திரவாதி தோன்றினான். தாடி மீசையுடனும் தலையில் பெரிய முண்டாசுடனும் விளங்கிய அந்த மந்திரவாதியைக் கண்டதும் வண்ணான் அப்படியே திகைத்துப் போனான். அவனுக்குஒன்றும் புரியவில்லை. மந்திரவாதியையும் கழுதையையும் அவன் மாறி மாறிப் பார்த்தான்.

மந்திரவாதி இரண்டு கைகளையும் கூப்பி முதலில் வண்ணானை வணங்கினான்.

"என்னுடைய புஸ்தகங்களும் டைரிகளும் மழையில் கொஞ்சம் நனைந்துபோய் விட்டன. அதற்காக அவைகளை என் வீட்டு வாசலில் வெய்யிலில் காய வைத்திருந்தேன். அந்தப் புஸ்தகங்களையும் டைரிகளையும் யாராவது திருடிக் கொண்டு போய் விட்டால் என்ன செய்வது என்று நானும் புஸ்தகமாக உருவெடுத்துக் காவல் காத்துக்கொண்டிருந்தேன். அனால் இந்தக் கழுதை முதல் எடுப்பிலேயே என்னை விழுங்கி விட்டது. எவ்வளவோ முயன்றும் என்னால் வெளியே வர முடியவில்லை. நல்ல வேளை, நீ இந்தக் கழுதையைக் கண்டு பிடித்து அடி கொடுக்காவிட்டால் நான் பிழைத்திருக்க மாட்டேன். கழுதையின் வயிற்றில் நான் இருந்த படியினால்தான் அதற்குப் பேசும் சக்தி வந்திருந்தது. இனி அதனால் பேச முடியாது!" என்றான் மந்திரவாதி.

வண்ணானுக்கு இதைக் கேட்டதும் ஆச்சரியமாயிருந்தது. அவன் திறந்த வாயை மூடாமல் மந்திரவாதியைப் பார்த்துக்கொண்டு நின்றான்.

"என்னைப் பிழைக்கவைத்த உனக்கு என்ன வேண்டும்? சொல்!" என்று மந்திரவாதி கேட்டான்.

"எனக்கு ஒன்றும் வேண்டாம். என்னுடைய கழுதை எனக்குக் கிடைத்து விட்டது. நீ மறுபடியும் மந்திரப் புஸ்தகமாக மாறிக் கழுதையின் வாயில் சிக்காமல் இருந்தால், அதுவே எனக்குப் போதும்!" என்று வண்ணான் சிரித்துக் கொண்டே சொன்னான்.



# எதிர்பாராதது!

வள்ளி

**பு**தூர் சேரியிலேயே முருகன் எல்லோருடைய மதிப்புக்கும் உரியவன். யாரும் அவனைக் கலக்காமல் ஒன்றும் செய்ய மாட்டார்கள். அவன் மகள் கருப்பாயி. அவளுக்குச் சரியாகப் பத்து வயதாவதற்கு முன்பே தாயார் இறந்து விட்டாள். அந்த ஸ்தானத்தில் செங்காத்தாளை ஏற்றி வைத்தான் முருகன். செங்காத்தாள் கருப்பாயியைச் செல்வமாக வளர்த்தாள். அவள் அவ்விதம் வளர்ப்பதற்குக் காரணம் தன் தம்பி சின்னையாவுக்குக் கருப்பாயியைக் கல்யாணம் செய்து வைக்க வேண்டும் என்ற எண்ணந்தான் என்று ஊரிலே சொல்லிக் கொண்டார்கள். இந்த விஷயம் அவனுக்கும் தெரிந்திருந்தது. ஆனால் செங்காத்தாள் அதை லட்சியம் செய்யவில்லை. ஏனெனில், அவள் விரும்பியதும் அதுதானே!

ஆனால் முருகனோ தன்னுடைய தங்கை மகன் ராமனுக்குக் கருப்பாயியைக் கல்யாணம் செய்து கொடுத்துவிட்டுக் கண்ணை மூட வேண்டும் என்று எண்ணிக் கொண்டிருந்தான். அத்துடன் "பெரிய பண்ணை என்ற மதிப்புக்கு உரியவன் ராமன்; 'காசு காசு' கையில் உள்ளவன்" என்பதும் சேர்ந்த பிறகு, முருகனால் ராமனைத் தவிர வேறு யாருக்கும் கருப்பாயியைக் கல்யாணம் செய்து வைக்க இஷ்டமேயில்லை.

இந்த விஷயத்தில் முருகனும் செங்காத்தாளும் கொண்ட அபிப்பிராய பேதம் அவர்களை அடிக்கடி வம்பில் மாட்டி, தங்கள் தங்கள் தலைமுறைகளின் யோக்கியதாம்சங்களைப் பற்றித் தலை கீழாக ஒப்புவிக்கும் நிலையில் கொண்டு வந்து விட்டுவிட்டது. இதனால் அவர்கள் சாப்பிட மறந்த நாட்கள் எத்தனையோ!

★

**நா**ட்கள் பறந்தன. காலம் கருப்பாயியைக் கன்னிப் பெண்ணாக்கி விட்டுச் சென்றது. அவளது எடுப்பான தேகக் கட்டும் கவர்ச்சிகரமான முகமும், முருகனையும் செங்காத்தாளையும் விடச் சின்னையாவையும் ராமனையுமே அவளுடைய கல்யாணத்தைப் பற்றி அடிக்கடி எண்ணச் செய்தது. வயது வந்ததும் சின்னையாவையும், ராமனையும் தற்செயலாகப் பார்க்க நேரிட்டால் கருப்பாயி உடனே ஓடி மறைந்து விடுவாள். இதைப் பார்த்தும் பாராமல் போகும் அவர்களுடைய உள்ளத்தில்தான் எத்தனைவித அலைகள்! "தனக்கில்லாமலா கருப்பாயி!" என்று ராமன் எண்ணுவான். "அக்கா மகள் என்ற முறை விட்டுப் போயிடுமா!" என்று சின்னையா நினைப்பான். ஆனால் கருப்பாயியின் உள்ளத்திலோ கட்டுமஸ்தான தேகத்துடன் புன்னகை தவழத் தன் உழைப்பில் தானே மகிழ்ந்திருக்கும் சின்னையாதான் இடம் பெற்றிருந்தான். இந்த விஷயம் சின்னையாவுக்கோ, ராமனுக்கோ தெரியாது.

இவர்களுடைய எண்ணங்களையெல்லாம் முருகனா லட்சியம் செய்பவன்? கருப்பாயியின் வயது, 'இந்தத் தை மாதத்துக்குள்ளேயே அவளுடைய கல்யாணத்தை முடித்துவிட வேண்டும்' என்ற எண்ணத்துக்கு அவனை ஆளாக்கியது. அவனுக்கென்ன? வெண்ணெய் போல் கையிலே இருக்கிறான் ராமன். இப்படிப் பார்த்தால்



தங்கை மகன் மாப்பிள்ளை; அப்படிப் பார்த்தால் பெண்ணைக் கல்யாணம் செய்து கொண்ட மாப்பிள்ளை! அவ்வளவுதான், செங்காத்தாளிடமும் தன் யோசனையை அவன் தெரிவித்து விட்டான்.

முருகன் ஏற்கெனவே முரடன். அவன் ஒரு தீர்மானத்துக்கு வந்துவிட்டால் மறுபடி அதை மாற்றிக்கொள்ள மாட்டான் என்பது செங்காத்தாளுக்குத் தெரியும். இருந்தாலும் ஒரு ஆசை. பயபக்தியுடன் அவனை நெருங்கி, "சிறிசு; அவன் மனசுபோல் செய்வதுதான் நல்லது. பின்னாலே கண்ணைக் கசக்கிக்கிட்டு அது நிற்கிறப்போ நாம்தானே கஷ்டப்படணும்? தங்கச்சி மகன் என்றால் எப்படியிருந்தாலும் கொடுத்துடறதா? சின்னையாக்குத்தான் என்னவாம்? வயித்துச் சோத்துக்குக் குறைவில்லாமல் தினம் நாலு காசு சம்பாதிக்குது. ஒரு கெட்ட வழக்கமில்லை. பெரியவங்களைக் கண்டா மரியாதை காட்டுது. உனக்குத் தெரியாததை நான் என்ன சொல்லப் போறேன்? நமக்கும் கருப்பாயியை விட்டா குழந்தை குட்டி வேறே இல்லை. அவனைச் சின்னையாவுக்கே கொடுத்து வீட்டோடு வச்சிக்கிட்டா, அதுகளும் நம்ம பேரைச் சொல்லும்!" என்றாள்.



"ஐ, பின்னே! இந்தா, இதையெல்லாம் நானும் யோசிச்சுத்தான் செய்திருக்கேன். என் இஷ்டம்; நீ கருப்பாயியைப் பெத்தவளில்லை. நான் ராமனுக்குத்தான் அவளைக் கொடுக்கப் போறேன்; கொடுப்பேன்! ஆமா!" என்று உறுமினான் முருகன்.

"நீ கருப்பாயியைப் பெத்தவளில்லை!" என்று முருகன் கூறியது செங்காத்தாளைச் சுருக்கென்று தைத்தது. கடனுக்குப் பெற்றுப் போட்டுவிட்டுப் போனவளுக்குப் பாத்தியதை உண்டு; பத்திலிருந்து பதினாறு ஆக்கிப் பூத்துப் பொலியும் ஒரு பூங்கொடி ஆக்கிவிட்ட தனக்கு எவ்விதப் பாத்தியதையுமில்லை! — இது செங்காத்தாளின் கோபத்தைக் கிளறிவிட்டது. ஆத்திரத்தில் முருகனை எதிர்த்து என்னென்னவோ பேசிவிட்டாள்.

இதனால் வளர்ந்த சண்டையில் செங்காத்தாளுக்கு அடியும், கருப்பாயிக்கு அழுகையும் வந்ததுதான் மிச்சம். முருகன் எழுந்து போய்விட்டான்.

★

கல்யாணத்திற்கு இன்னும் நான்கு நாட்கள்தான் இருந்தன. கண்ணீராலும், கதறலாலும் கருப்பாயியால் சாந்தமடைய முடியவில்லை. எப்படியும் அன்று சின்னையாவை நேரில் கண்டு, "உனக்கு என் மேல் பிரியமில்லையா?" என்று கேட்டுவிட எண்ணினாள். உடனே குடத்தை எடுத்துக் கொண்டு கேணிக்குக் கிளம்பிவிட்டாள். மேலத் தெரு, பண்ணையார் வீடு, சங்கரனூர் கோவில், மேட்டுக் கம்பம் எல்லாவற்றையும் கடந்து அவ்வளவு சீக்கிரத்தில் எப்படி வந்தோம் என்றே அவளுக்குத் தெரியவில்லை. இதை நினைத்தும் தன்னை அறியாமல் அவள் ஒரு புன்னகை பூத்தாள். அதே சமயம் அவளைக் கவனித்துக் கொண்டே எதிரில் வந்து நின்றான் சின்னையா. அவனைக் கண்டதும் கருப்பாயி தலையைத் தொங்கப் போட்டுக்கொண்டாள்.

"என்ன, கருப்பாயி! உனக்கும் ராமன் அண்ணனுக்கும் வர வெள்ளிக்கிழமை கண்ணாலமாமே, நிசந்தானா? உனக்கு என் மேல் பிரியமே இல்லையாதா?" என்று ஏதோ தனக்கும் காதுக்குமாகக் கேட்டு விட்டான் சின்னையா.

இதைச் சற்றும் எதிர்பாராத கறுப்பாயிக்குப் பேசவே நா எழவில்லை. இருந்தாலும், "நான் ராமனைத்தான் கட்டிக்கப் போறேன்னு எப்போ சொன்னேனும்?" என்று மென்று விழுங்கிக் கொண்டே கூறினாள். இதைக் கேட்ட சின்னையாவுக்குத் தான் நின்று கொண்டிருந்த ஆலமரத்தடி அப்படியே பெயர்ந்து எங்கேயோ போவது போல் தோன்றிற்று.

இவ்விதம் ஒன்றுக்குப் பின் ஒன்றாக வளர்ந்த அவர்களுடைய பேச்சு எல்லையில்லாமல் பெருகி, முடிவில் கல்யாண நாளுக்கு முதல் நாள் நடுநிசியில் யாருக்கும் தெரியாமல் எங்கேயாவது தப்பி விடுவது என்ற தீர்மானத்தில் வந்து நின்றது.

இந்தச் சமயத்தில், "அப்படி ஒன்றும் செய்திடாதீங்க; கெட்ட பேருதான் மிச்சம்! ஏ, கறுப்பாயி! நீ சின்னையாவைக் கட்டிக்கிட்டு என்னுடன் வா, சொல்றேன்!" என்று அன்புடன் — ஆனால் அதிகாரத் தோரணையில் — தங்களுக்கு முன்னால் வந்து நின்று சொல்லும் ராமனைக் கண்டதும், சின்னையாவும் கறுப்பாயியும் பேந்தப் பேந்த விழித்தார்கள். மறுபடியும் ராமன் அதட்டவே, அவனுடைய வார்த்தையைத் தட்ட முடியாமல் சின்னையாவும் கறுப்பாயியும் கொலைக்குற்றம் செய்தவர்கள் போல் முகம் வெளுக்க அவனைத் தொடர்ந்தார்கள்.

அவர்களைக் கூட்டிக்கொண்டு முருகனிடம் வந்தான் ராமன். ராமன், சின்னையா — இவர்களிடையே கறுப்பாயி! — இப்படியாகச் சேர்ந்து பார்த்ததும் முருகனுக்கு ஒன்றுமே விளங்கவில்லை.

"மாமா! பேசாமல் நம்ம கறுப்பாயியைச் சின்னையாவுக்கே கொடுத்திடு! எனக்கு அவள் வேண்டாம். அவள் மேலே அவனுக்கு ஆசை இருக்கச்சே நான் எப்படி மாமா, அவளைக் கட்டிக்கிறது? பின்னாலே, நான் தான் — இல்லை, அவன் தான் — என்ன சுகம் காணப்போறோம்?" என்றான் ராமன். இதைக் கேட்டதும் முருகன் திக்குமுக்காடிப் போனான்.

அவனை லட்சியம் செய்யவில்லை ராமன்; அடுத்த சில நாட்களுக்குள் கல்யாணத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளையெல்லாம் அவனே செய்தான். ஒரு சுப தினத்தில் சின்னையாவையும் கறுப்பாயியையும் அழைத்துக் கொண்டு சங்கரனூர் கோவிலுக்குச் சென்றான். பூசாரி முத்தண்ணன் உதவியால் கல்யாணத்தைச் செய்து முடித்தான்.

இந்தக் கல்யாணம் முருகன், சின்னையா, கறுப்பாயி எதிர்பாராததுதானே?

## விருந்துப் போட்டி!




ருஷ்யாவுடன் சமரசம் பேசுவதற்காக ட்ரூமன் மாஸ்கோவுக்குச் செல்லுவதா, அல்லது ஸ்டாலினை அமெரிக்காவுக்கு அழைப்பதா என்ற பிரச்னை இன்னும் தீர்ந்தபாடில்லை!

# கம்பர் தரும் காட்சி




சீதை ஒரு வேளை இறந்து போயிருக்கலாம். அப்படியானால் 'அந்தச் செய்தி ராமன் முதலியோரிடம் சொல்லி என்ன செய்ய? உயிர் துறப்பதே நல்லது' என்று எண்ணி அவர்களாக இறந்து போனார்களோ!

மாண்டனள் அவளிவண்
மாண்ட வார்த்தையை
மீண்டவர்க் குரைத்தலின்
விளிதல் நன்றெனப்
பூண்டதோர் துயர்கொடு
பொன்றி னார்கொலோ,
தேண்டினர் இன்னமும்
திரிகின் றார்கொலோ!

[மாண்டனள் அவள்: சீதை இறந்து போயிருக்கலாம்—அதைக் கண்டு; இவண் மாண்ட வார்த்தையை: இந்த இடத்தில் இப்படி இறந்து போன செய்தியை; மீண்டு அவர்க்கு உரைத்தலின் விளிதல் நன்று என: திரும்பிப்போய் ராம லக்ஷ்மணர்களுக்குச் சொல்லுவதைவிட உயிர் துறத்தல் நமக்கு நல்லது என்று எண்ணியவராய்; பூண்டதோர் துயர்கொடு: பற்றிய துயரத்தினால் இறந்து போய் விட்டார்களோ: அல்லது—தேண்டினர் இன்னமும் திரிகின்றார் கொலோ: தேடிக்கொண் டிருப்பவர்களாய் இன்னமும் நாலா பக்கமும் திரிந்துகொண்டு தான் இருக்கிறார்களோ — என்று ராமன் சொல்லுகிறான்.]

## 232. தொழவில்லை ராமனை!

ராமனும் சுக்ரீவனும் உட்கார்ந்திருக்கிறார்கள். ராமன் பேசுகிறான்:

தேடிப் போனவர்கள் வரவேண்டிய நாட்கள் கடந்து விட்டன. தென் திசை நோக்கிப் போனவர்கள் இன்னும் இங்கு வரவில்லை.

குறித்தநாள் இகந்தன;
குன்றத் தென்திசை
வெறிக்கரும் குழலியை
நாடல் மேயினர்
மறித்திவண் வந்திலர்;
மாண்டு ளார்கொலோ;—
பிறித்(து)அவர்க் குற்றுள(து)
என்னை பெற்றியோ.

[குறித்த நாள் இகந்தன: கெடுவாக வைத்த நாட்கள் எல்லாம் கழிந்து விட்டன; குன்றத் தென் திசை: குன்றுகள் அடர்ந்த தென் திசையை நோக்கி; வெறிக் கருங் குழலியை நாடல் மேயினர்: வாசனை யுள்ள கருங் கூந்தல் கொண்ட சீதையைத் தேடிப் போனவர்கள்; மறித்து இவண் வந்திலர்: திரும்பி இங்கே வரவில்லை; மாண்டுளார் கொலோ: இறந்து போய் விட்டார்களோ; பிறித்து அவர்க்கு உற்றுளது என்னை பெற்றியோ: மற்றப்படியாக அவர்களுக்கு நேர்ந்தது என்ன விதமான காரியமோ?—ஆபத்தோ! பிறித்து: பிறிது.]

•••

இப்படி ராமன் சுக்கிரீவனிடத்தில் சொல்லிக் கொண்டிருக்கும்போது தெற்கு திக்கில் ஒரு பிரகாசம் தோன்றுகிறது.

என்புழி அனுமனும்,
இரவி என்பவன்
தென்புறத்(து) உளனெனத்
தெரிவ(து) ஆயினன்;—
பொன்பொழி தடக்கையப்
பொருநில் வீரனும்,
அன்புறு சிந்தையின்
அமைய நோக்கினன்.

[என்பு உழி: போனவர் கதி என்ன ஆயிற்றோ என்று வருந்தி ராமன் சொல்லிக் கொண்டிருக்கும் சமயத்தில்; அனுமனும்: அனுமனானவன்; இரவி என்பவன் தென்

புறத்து உளன் என: சூரியன் என்று சொல்லப்படுகிறவன், மேற்கு திசையில் தோன்றுவதில்லைபோலிருக்கிறது. தென் திசையிற் போய்த் தோன்ற ஆரம்பித்து விட்டான் என்று சொல்லும் படியாக; தெரிவதாயினான்: செம்மேனியோடு கண்ணுக்குப் புலப்பட்டான்: பொன் பொழி தடக்கை அப்பொருவில் வீரனும்: தானம் செய்வதிற் பழகிச் சிறந்த கையினனுமான ஒப்பற்ற வீரனும்—ராமனும்; அன்புறு சிந்தையன்: அன்போடு கூடிய மனத்தவனும்; அமைய நோக்கினான்: ஆசையோடு பார்த்தான்.]

*
* *

அடுத்த நிமிஷமே ராமன் முன்னிலையில் அனுமன் வந்து விட்டான். ஆனால் ராமனை வணங்க வில்லை.

> எய்தினன் அனுமனும்;
> எய்தி, ஏந்தல்தன்
>
> மொய்கழல் தொழுதிலன்;—
> முளரி நீங்கிய
>
> தையலை நோக்கிய
> தலையன், கைகொடு
>
> வையகந் தழீஇநெடி(து)
> இறைஞ்சி வாழ்த்தினன்.

[எய்தினன் அனுமனும்: ராமன் பக்கத்திலேயே வந்துவிட்டான் அனுமன்; எய்தி: பக்கத்தில் வந்ததும்; ஏந்தல்தன் மொய்கழல் தொழுதிலன்: ராமனது அழகு செறிந்த திருவடியை வணங்கவில்லை—வேறு என்ன செய்தான்! முளரி நீங்கிய தையலை நோக்கிய தலையன்: தாமரையை விட்டு நீங்கிய லக்ஷ்மி தேவியான சீதை இருந்த தென் திசையை நோக்கியவனாய்த் தலையைத் திருப்பிக்கொண்டு; கை கொடு வையகம் தழுவி: இரண்டு கைகளையும் பூமியிலேயே பொருந்தும்படியாக வைத்துக் கூப்பினவனாய்; நெடிது இறைஞ்சி வாழ்த்தினன்: நெடிதாகக் கீழே விழுந்து நமஸ்கரித்து (தெற்கு நோக்கித்தான்) சீதா தேவியை வாழ்த்தினான்—'தாயே! தெய்வமே!' என்றெல்லாம் வாழ்த்தினான்.]

ராமனை நெருங்கிய மாத்திரத்தில் அனுமன் மனதில் சீதையின் உருவம் தோன்றிவிட்டது! அடக்க முடியாத உணர்ச்சியும் பக்தியும் மேலிட்டு விட்டது. அப்படியே சீதை யிருந்த திசையை நோக்கித் தரையில் விழுந்து நமஸ்கரிக்கிறான். அபூர்வமான உணர்ச்சி பாவத்தில் வெளியாகிறது கவி.

# யோசிக்கும் வேளையில்........



'யோசிக்கும் வேளையில் பசி தீர உண்பதுவும் உறங்குவதுமாக முடியும்' என்று தாயுமானவர் ஒரு காலத்தில் நினைத்தார். ஆனால் நம் நாட்டில் பல பிரமுகர்கள் வீட்டில் வெகு அருமையாகக் குட்டையும் கட்டையுமான நாய்களையும் நெட்டையும் நீளமுமான நாய்களையும் வளர்த்து வருகிறார்கள். இதன் ரகசியம் பற்றி யோசித்த வேளையில் நான் ஒரு முடிவுக்கு வந்தேன். அவ்விதம் யோசிக்க அன்று ஒரு சந்தர்ப்பமும் எனக்குக் கிடைத்தது.

அன்று ஆபீஸிலிருந்து அலுத்துச் சலித்து வீட்டுக்கு வந்ததும் என் அருமைக் குழந்தை 'அப்பா! மிட்டாய் வாங்கி வந்தாயா? சீப்பன் வாங்கி வந்தாயா?'' என்று கேட்டாள்.

''மிட்டாயுமாச்சு : சீப்பனுமாச்சு'' என்று 'வள்' என்று விழுந்தேன்!

உடனே அவள் ஏழுகட்டைச் சுருதியில் 'பாட்டு' ஆரம்பித்து விட்டாள்!

இதைக் கேட்டுக் கொண்டே வந்த என் சகதர்மிணி ''ஆபீஸிலிருந்து வந்ததும் வராததுமாக இப்படியா, பாவம், குழந்தைமேல் எரிந்து விழணும்!'' என்று என்னைப் பார்த்துக் கடிந்து கொண்டாள்.

குழந்தையின் வரவேற்பு அப்படி: மனைவியின் வரவேற்பு இப்படி!

''ஆமாம்: உன் குழந்தை மேல் எரிந்து விழுறதும் என்பதற்காகத்தான் என்னை ஆபீஸிலிருந்து ஐந்து மணிக்குக் கட்டவிழ்த்து விட்டார்களாக்கும்'' என்றேன் கோபமாக.

இதைக் கேட்ட என் தகப்பனார், ''என்னடாப்பா! ஆபீஸிலிருந்து வந்ததும் வராததுமாக எல்லோர் மேலேயும் 'வள்' 'வள்' என்று நாய் போல் எரிந்து விழுகிறாயே'' என்று தீர்மானம் கொடுத்தார்.

'நானா நாய் போல் விழுகிறேன்?' என்று முதலில் நினைத்தவன் அடுத்த நிமிஷம் நாயைப் பற்றி நினைக்க ஆரம்பித்தேன்.

'குழந்தை, மனைவி, அப்பா—இவர்கள் மேல் எல்லாம் நான் செலுத்துகிற அன்பை ஒரு நல்ல நாயாகப் பார்த்து வளர்த்திருந்தால் என்ன செய்திருக்கும்?' என்று எண்ணினேன். நான் ஆபீஸிலிருந்து வந்ததும் வராததுமாக 'பிஸ்கோத்து கொடு' என்று கேட்டிராது.



வாலை ஆட்டிக்கொண்டு, நம்மேல் பாய்ந்து விளையாடி அன்பு காட்டி வரவேற்றிருக்கும்.

ஆ! இப்பொழுது நன்றாய் தெரிகிறது. நாயை உலக முழுதிலும் மக்கள் இவ்வளவு அன்பாக வளர்த்து வருவதின் ரகசியம்.

நாய் எப்பொழுதும் நாக்கை அசைப்பதே யில்லை! வாலைத்தான் ஆட்டுகிறது!

—''ரேவங்கு''

# எண்ணத்தைச் சொல்!

சோமாஸ்

காலையில் காப்பி சாப்பிட்டுவிட்டு வாசலுக்கு வந்தேன். "ஸார்!" என்று யாரோ கூப்பிட்ட குரல் கேட்டுத் திரும்பி னேன். வேறு யாருமில்லை. என்னுடன் ஒரே தெருவில் வசிப்பவரும், என்னுடன் ஒரே ரயிலில் தினம் பிரயாணம் செய்கிற வரும், எனக்கு வரும் பத்திரிகைகளின் இலவச வாசகருமான நண்பர் சிவப் பிரகாசம் அவர்கள்தான்.

"வாருங்கள், சிவப்பிரகாசம்! உட்கா ருங்கள். ஏது இப்படி, காலைவேளையில் தரிசனம்?" என்று கேட்டேன்.

"ஒன்றுமில்லை. இப்படி ரயில்வே கிரெயின் ஷாப்புக்கு வந்தேன். இன்னும் கடை திறக்கவில்லை. உங்களைப் பார்த்து விட்டுப் போகலாமென்று வந்து கூப் பிட்டேன்" என்றார்.

"சரிதான்; கடை திறக்க இன்னும் அரைமணி யாகும் போலிருக்கிறதே. இருக்கட்டும். இந்த ரயில்வே தானியக் கடைகளை யெல்லாம் எடுத்துவிடப் போகிறார்களாமே. அவைகளை எடுக்கக் கூடாது என்று பலமான எதிர்ப்பு இருக் கிறப் போலிருக்கிறதே! உங்களுக்கு என்ன தோன்றுகிறது? தானியக் கடைகள் இருக்கவேண்டுமா, ஒழிந்து போக வேண்டுமா?"

"ரயில்வே தானியக் கடைகளினாலே ரயில்வேக்குச் சரியான நஷ்டம். ரயில்வே ஊழியர்களுக்குக் கஷ்டம். அது ஒழிந் தால்தான் நல்லது!" என்றார் ஆவேசம் வந்தவர் மாதிரி.

அவர் அப்படிச் சொன்னதும் எனக்குச் சிரிப்புத்தான் வந்தது.

"ஏன் ஸார்! நாங்கள் சாமான்களுக்குக் கொடுக்கும் விலையில் மூன்றில் ஒரு பங்கு தானே நீங்கள் கொடுக் கிறீர்கள்! நல்லெண் ணெய் நாங்கள் வீசை மூன்றே கால் ரூபாய் என்று வாங்குகிறோம். நீங்கள் வீசை பதினொரு அணா என்று வாங்கு கிறீர்கள். மைசூர் சந்தன சோப்பு சாதாரணக் கடைகளில் பன்னிரண்டணா வுக்கு விற்கிறது. உங்கள் ரயில்வே தானி யக் கடையில் ஐந்தணாவுக்குக் கிடைக் கிறது. இப்படியே ஒவ்வொரு சாமானும் ரயில்வே ஊழியர்களுக்கு ரொம்ப மலி வாகக் கிடைக்கிறது. இதை நினைக்கும் போது நான் கூட ஒரு ரயில்வே உத்தி யோகஸ்தனாக இல்லாமற் போனேனே என்று ரொம்ப வருத்தமாயிருக்கிறது. நீங்கள் என்னடா என்றால் தானியக் கடைவேண்டாம் என்றுசொல்கிறீர்கள்!"

வாஸ்தவத்திலேயே நண்பருக்கு அப் போது கோபம் வந்துவிட்டது.

"இப்படித்தான் ஸார், உங்களைப் போல ரொம்பப் பேர் ரயில்வேக்காரர் களைக் கரிக்கிறார்கள். 'உங்களுக்கு என்ன ஸார்! ரயில்வேயிலே எல்லாச் சாமான் களும் மலிவாய்க் கிடைக்கிறது. எங்களைப் போலவா?' என்று எத்தனையோ பேர் என்னிடம் சொல்லிக் கரித்துக் கொட்டு கிறார்கள். என்னமோ எங்கள் வீட்டில் எல்லோரும் தினம் மைசூர் சந்தன சோப்புத்தான் தேய்த்து ஸ்நானம் செய் கிறார்கள் என்று நினைத்துக் கொண்டு நீங்களும் பேசுகிறீர்கள். ஒரு நாளைக்கு என்னுடன் வந்து ரயில்வே தானியக் கடையைச் சற்று நேரம் பாருங்கள். முக்கியமான சாமான் எதுவும் அங்கே கிடைக்கிறதில்லை. நாங்களும் அனேக மாக எல்லாச் சாமான்களையும் வெளி யிலேதான் வாங்குகிறோம். நாங்கள் ரொம்ப மலிவாக வாழ்க்கையை நடத்து கிறோம் என்று நினைக் கும் உங்களைப் போன்ற பிரகிருதிக ளுக்காகவே இந்தத் தானியக் கடைகள் ஒழிய வேண்டும். அனா வசியமாகக் கெட்ட பேர் வருகிறது பாருங் கள்!" என்று நண்பர் சிவப்பிரகாசம் பட படப்புடன் கூறினார்.

"அது சரி. பின்பு ஏன் ரயில்வே தானி யக் கடைகளை மூடக்



கூடாது என்று ஒரு புறம் கிளர்ச்சி நடக்கிறது? அதையும் உங்களைப் போன்ற ரயில்வே ஊழியர்கள் தானே நடத்துகிறார்கள்?" என்று கேட்டேன்.



"வாஸ்தவந்தான். ரயில்வேத் தொழிலாளர் சிலருக்குத் தானியக் கடையினால் அநுகூலம் இருக்கிறது. அப்படிப் பட்டவர்கள்தான் கிளர்ச்சி செய்கிறார்கள். என் நண்பர் ஒருவர் சமீபத்தில் குண்டக்கல்லிலிருந்து வந்தார். அவர் சொன்ன சுவாரஸ்யமான கதையைக் கேளுங்கள். குண்டக்கல்லில் அவர் ஒரு மளிகைக் கடைக்குப் போய் மிளகாய் வேண்டும் என்று கேட்டாராம். கடைக்காரன் இல்லை என்றானாம். கல்லெண்ணெய் கேட்டாராம். அதுவும் இல்லையென்று கடைக்காரன் கையை விரித்து விட்டானாம். உடனே நண்பர் கோபத்துடன், 'என்ன ஐயா இது! எந்தச் சாமானைக் கேட்டாலும் இல்லை என்கிறீரே!' என்றாராம். அதற்கு அவன் 'நான் என்ன செய்யட்டும், ஸார்! ரயில்வே கிரெயின் ஷாப்பில் ஒரு சாமானும் வரவில்லையே!' என்றானாம். பார்த்தீர்களா, எவ்வளவு பகிரங்கமாக அக்கிரமம் நடக்கிறது என்று?"

"நீங்கள் சொன்னதைக் கேட்ட பிறகு எனக்குக் கூட ரயில்வே தானியக் கடையை மூடிவிட வேண்டியது நியாயந்தான் என்று படுகிறது. இன்னொன்று பார்த்தீர்களா? ரேஷனில் ஒரு பண்டம் கிடைக்கிறது என்றால் அதை எப்படியாவது வாங்கிவிட வேண்டும் என்ற பழக்கமும் உண்டாகிவிடுகிறது. அது அவசியமா இல்லையா என்று நாம் யோசிப்பதில்லை. சர்க்கரை ரேஷன் இருந்த போது எங்கள் வீட்டுக்கு ஆறு வீசை கிடைத்தது. அந்த ஆறு வீசை சர்க்கரையையும் எப்பாடு பட்டாவது வாங்கிக் கொண்டிருந்தேன். எங்களுக்கு அவ்வளவு சர்க்கரை தேவையில்லை. விறகு ரேஷனும் அப்படித்தான். தேவையில்லாதவர்களுக்கெல்லாம் சம்பளவிகிதப்படி ஏகப்பட்ட விறகு கிடைத்தது. விறகு ரேஷன் ஒழிந்த பிறகு பாருங்கள். வேண்டிய விறகு கடையில் கிடைக்கிறது. வாங்குவாரைத்தான் காணோம்!" என்று எனக்குத் தெரிந்த உண்மையைப் பலமாக அடித்துச் சொன்னேன்.

"நீங்கள் சொல்வது சரிதான், ஸார்! வீட்டுப் பெண்களுக்கு அது எங்கே தெரிகிறது? ரேஷன் கார்டில் என்னென்ன கிடைக்கிறதோ அவ்வளவையும் வாங்கித்தான் ஆக வேண்டும் என்று பிராணனை வாங்கி விடுகிறார்கள். சரி, நான் வரட்டுமா? கடை திறந்திருப்பான்" என்று சொல்லிவிட்டு வெளியேறினார்.

சிவப்பிரகாசம் மறைந்ததும், என் சகதர்மிணி காட்சியளித்தாள்.

"ஏன்னா, உங்களுக்கு ஏன் இந்த ஊர் வம்பெல்லாம்? அவர் சொன்னதையெல்லாம் கேட்டுக் கொண்டுதான் இருந்தேன். குண்டக்கல்லில் நடந்ததாக ஒரு சம்பவம் சொன்னாரே, இங்கே மாத்திரம் என்ன? சாதாரணக் கடைகளில் நெய் பத்து ரூபாய் வீசை. ரயில்வே தானியக் கடையில் வீசை மூன்று ரூபாய். நமக்கு ஐந்து ரூபாய்க்குக் கிடைக்கிறது! அவ்வளவு சௌகரியம் இருக்கிறபோது, அந்த ரயில்வேக் கடையை மூடவேண்டும் என்கிறீர்களே?" என்றாள்.

அதற்கு மேலே நான் என்ன சொல்லுவதற்கு இருக்கிறது?



## தெரியாத விஷயம்!

ஒருவர்:— பணக் கஷ்டம் என்று சொல்கிறீர்களே, உங்கள் பாட்டி நிறையச் சொத்து வைத்துவிட்டுப் போய்விட்டாள் என்று கேள்விப் பட்டேனே!

மற்றவர்:—அது தான் எங்கே வைத்துவிட்டுப் போனாள் என்று தெரியவில்லையே!

# வட்ட மேஜை

★

கொழும்பு
22—11—48

## 'மேனன்' விஷயம்

'கல்கி' ஆசிரியர் அவர்களுக்கு,

தங்கள் 7—11—48 'கல்கி' இதழில் 'மேனன் மயம்' என்ற தலைப்பிட்டுப் பிரசுரமாகியிருந்த கடிதத்தைப் பார்க்க வியப்பாக இருந்தது. அதில் 'ரஜனி' என்பவர் இலங்கையில் இந்தியப் பிரதிநிதிகளை நியமிக்கும் விஷயமாக இந்திய அரசாங்கத்தின் போக்கைக் கண்டித்திருந்தார். நான் இந்த உத்தியோக நியமனங்களைப் பற்றிச் சிறிதும் கவலை கொள்பவனல்ல. அவை நியாயம் என்றோ அநியாயம் என்றோ சொல்வதற்கும் நான் தயாராயில்லை. மேனன்களாயினும் சரி, ரெட்டியார், பிள்ளைமார், தேவர்கள், கான்கள் யாராயினும் சரி, எனக்கு யாதொரு வித்தியாசமும் தோன்றுவதில்லை. அவர்கள் இந்தியர்களாகவும் கொடுக்கப்பட்ட உத்தியோகத்தைத் திறமையாக வகிக்கக் கூடியவர்களாகவும் இருந்தால் போதும், நான் திருப்தி கொள்வேன். ஏனெனில் வெளிநாட்டுக்குப் பிரதிநிதிகளாகச் செல்பவர்கள் செய்ய வேண்டிய வேலைகள் மிகவும் பொறுப்பு வாய்ந்தவை.

இன்றைய இந்திய அரசாங்கத்தார் சாதாரணமான ஒரு பதவிக்கு ஒருவரை நியமிக்கு முன்பாகக்கூட எவ்வளவோ ஆலோசித்து, அன்னாரை நியமிப்பதால் நாட்டில் எந்தவகைய விளைவுகள் ஏற்படும் என்று யோசித்தே செய்கிறார்கள் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு. அப்படியானால் வெளிநாட்டுப் பிரதிநிதிகளாக அனுப்பப் படுபவர்களைப் பற்றி அவர்கள் இன்னும் எவ்வளவோ தீர யோசித்து முடிவு செய்வார்கள் என்று சொல்ல வேண்டியதில்லை.

இந்திய அரசாங்கம் இலங்கையிலுள்ள தன் காரியாலயத்துக்கு ஒரு மலையாளியை நியமிப்பதால் இங்கே இந்தியர்களுக்கும் சிங்களவர்களுக்கு முள்ள நல்லுறவு சீர்கெடும் என்று நினைக்க இங்குள்ள இந்தியர்கள் அவ்வளவு அறிவிலிகள் அல்ல என்பதை 'ரஜனி'க்குத் தெரிவிக்க விரும்புகிறேன். மேலும் நாணயக்கார அவர்கள் ஜாக்ஸன் கமிஷனிடமும், சோல்பரி கமிஷனிடமும் கூறிய சாட்சியம் பொதுவாக இந்தியர்களைக் குறித்துத்தான். அதைத் திரித்து மலையாளிகளைக் குறித்தே அவர் அவ்விதம் கூறினார் என்று இங்குள்ள இந்தியர்கள் எண்ண மாட்டார்கள்.

எப்படியாயினும் ஒரு விஷயத்தில் 'ரஜனி'யைப் பற்றித் திருப்தி கொள்ளலாம். அவர் இலங்கையில் இந்திய அரசாங்கத்தின் பிரதிநிதிகளாக இந்தியர்களை நியமிக்காமல் சிங்களவர்களையே நியமித்தால் இலங்கை-இந்திய நல்லுறவு இன்னும் உறுதிப்படும் என்று கூறவில்லை அல்லவா!

கடைசியாக 'ரஜனி'க்கும் 'ரஜனி' போன்று எண்ண முடையவர்களுக்கும் ஒரு விஷயம் கூற விரும்புகிறேன். மேற்கண்டவாறு தங்கள் கருத்துக்களை வெளியிடுவது இந்தியத் துவேஷப் பிரசாரத்துக்குப் பேருதவி செய்வது போலாகும். இந்தியர்களிடையே ஒற்றுமையும், ஒருமை மனப்பான்மையும்தான் அவர்களுடைய எதிர்காலத்தை நிர்ணயிக்கக் கூடியவை. அந்த லட்சியத்துக்குப் பாடுபடும்படி 'ரஜனி'யைக் கேட்டுக் கொள்கிறேன்.

கே. வி. எஸ். ஆதியோடி

* * * * * * * * *

மாம்பலம்
22—11—48

## ★ டெலிபோனும் மின்சாரமும்

'கல்கி' ஆசிரியர் அவர்களுக்கு,

21—11—48 'கல்கி' இதழில் "சர்க்கார் பஸ்கள்" என்ற தலைப்பில் "சென்னைவாசி" எழுதியிருந்த விஷயம் பொதுமக்களின் கவனத்தை வெகுவாகக் கவர்ந்திருக்கிறது. அப்படியே சர்க்காரின் கவனத்தையும் கவர்ந்திருந்தால் மிகுந்த நன்மை விளையும். "பெட்ரோல் இல்லை" என்று சொன்ன டிரைவருக்கு சஸ்பெண்டும், வெய்யிலிலும் மழையிலும் அடிபடும் 'டைம்கீப்பருக்கு' வெகுட்டலும் கிடைப்பது உண்மையா அல்லவா என்று நாம் ஆராயத் தேவையில்லை. டைம்கீப்பரின் பரிதாபத்தை நாம் கண்ணால் பார்த்துக் கொண்டுதா னிருக்கிறோம்.

நாலு மெக்கானிக்குகளுக்கு ஒரு சூபர்வைஸர், நாலு சூபர்வைஸர்களுக்கு ஒரு போர்மேன், நாலு போர்மேன்களுக்கு ஒரு சார்ஜ்மேன் என்று இப்படி வெல்லாம் இருந்தும் பஸ்கள் ஓட்டையும் ஒடிசலுமாய் இருக்கிறதென்றால் இதற்குப் பரிகாரம் என்ன? சென்னையில் இருக்கும் மொத்த 'ரூட்'களை நாலு பாகமாகப் பகிர்ந்து, திறமையும் முன் அநுபவமுமுள்ள ராம விலாஸ், சுந்தரம் மோட்டார்ஸ், டிவி மோட்டார் சர்வீஸ் போன்ற நாலு கம்பெனிகளிடம் ஒப்படைக்கட்டும்! வரும் லாபத்தில் ஒரு சிறிய பகுதியை அவர்களுக்கு 'மானேஜிங் ஏஜண்டுகள் ஊதியம்' என்று கொடுக்கட்டும். டிரான்ஸ்போர்ட் ஆபீஸர்கள் அவ்வப்போது குறைகளைக் கவனித்து, மேற்படி கம்பெனிகளுக்கு உத்தரவுகள் பிறப்பித்துப் பரிகாரம் செய்யட்டும். சர்க்காருக்குத் தொல்லை குறையும்; நிர்வாகமும் சீர்ப்படும்.

இதைப்போல்தான் டெலிபோனும் மின்சாரமும்கூட. நிர்வாகம் சர்க்காருக்கு மாறிய பிறகு குளறுபடிகள் அதிகம் என்பது பொதுஜன அபிப்பிராயம்! ஒரு நம்பரைக் கூப்பிட்டால் வேறு நாலு நம்பர்கள் ஒன்றுக்கொன்று பேசிக் கொள்ளுவது நம் காதில் விழுகிறது. நமக்கு வேண்டாத சம்பாஷணைகளும் ரகசியங்களும் நமக்குக் கேட்கின்றன. நமக்கு வேண்டிய நம்பர் இலேசில் கிடைப்பதில்லை. அடிக்கடி டெலிபோன் மக்கர் பண்ணுகிறது!

முன்னெல்லாம் மின்சாரம் பழுதாகிவிட்டால் டெலிபோனில் கூப்பிட்டுச் சொன்னால் போதும்; ஐந்தே நிமிஷத்தில் ஆள் வந்துவிடுவார். இப்போது நாலுமுறை கூப்பிட்டுத் தொந்தரவு செய்த பிறகு இரண்டு மணி நேரம் கழித்துத்தான் ஆள் வருகிறார். 'ஏன் தாமதம்?' என்று கேட்டால், 'எங்களுக்கு சைக்கிள்கூடக் கிடையாது, சார்! நடந்துதானே வரவேண்டும்!" என்கிறார்.

எலெக்டிரிக் பில்லுக்காகக் கட்டும் பணத்தையும் ஒன்றுக் கொன்றாக தவறான கணக்கில் பதிந்து விட்டு அடிக்கடி 'அக்கௌண்ட் செண்டர்ட்' போட்டு, நோட்டீஸ் கொடுக்காமலேயே 'டிஸ்கனெக்ஷன்' (மின்சாரத்தை நிறுத்தல்) செய்து விடுகிறார்கள். மீண்டும் கனெக்ஷன் வேண்டுமென்று, சூப்பிரண்டெண்டிங் என்ஜினீயரிடம் ரிபோர்ட் கொடுத்து, அவர் டெபுடி சீப் அக்கௌண்டெண்டிடம் சொல்லி, அவர் செக்ஷன் சூபரெண்டிடம் அனுப்பி, அங்கிருந்து செக்ஷன் ஹெட்டிடம் தள்ளி, அவர் செக்ஷன் குமாஸ்தாவிடம் அனுப்பி, குமாஸ்தா ஆயிரம் கேள்விகள் கேட்டு, தான் செய்த தவறுக்கு சால்ஜாப்பு சொல்லிக் கணக்கைத் திருத்தி மீண்டும் படிப்படியாகப் போய், சிவப்பு நாடா குறைவின்றித் தாண்டவமாடி 'கனெக்ஷன்' கிடைக்கும் வரையில் குடித்தனக்காரர்கள் இருட்டிலேயே உட்கார்ந்திருக்க வேண்டியதுதான்!

இதை யெல்லாம் காங்கிரஸ் சர்க்கார் கவனித்து ஆவன செய்தல் அவசியம்!

ஏ. கே. பட்டுசாமி

• • •     • • •     • • •

கூனூர்
22—11—48

## இன்னும் கேளுங்கள்!

'கல்கி' ஆசிரியர் அவர்களுக்கு,

21—11—48 கல்கி இதழில், விட்டலாபுரம் ஸ்ரீ வெங்கடாச்சாரியின் வட்டமேஜையிலே பார்த்து தங்கள் "அரைப்படி அரிசி" அமுதை உண்டேன். ஆகா! பொதுஜன உணர்ச்சிக்குத் துணை செய்யும் சுவைமிக்க உணவு!

கண்ட்ரோல்! உணவுக் கண்ட்ரோல்!! இது பொதுவாகப் பொய் சொல்லுதல், ஆசை கொள்ளுதல், நாணய மிழத்தல், அநியாயம் செய்தல், அக்ரமம் புரிதல் ஆகியவற்றுக்கெல்லாம் ஜனங்களை மட்டுமன்றி அதிகாரிகளையும் இட்டமாகத் தூண்டுகிறதென்று சொல்ல வேண்டியதில்லை. அது மட்டுமா? கொலைபாதகத்துக்குக் கூட ஆளாக்கிவிடுகிறது இந்தக் கண்ட்ரோல் பூதம். பொய்யல்ல. சமீபத்தில் செங்கோட்டைக்கு அருகே நடந்த போலீஸ் பொதுஜனக் கைகலப்பே இதற்குப் போதிய சான்றாகும்.

சென்னை மாகாணத்தில் ஒரு கோட்டை நெல்லின் கண்ட்ரோல் விலை ரூ. 24. அதே ஒரு கோட்டை நெல் திருவிதாங்கூர் சமஸ்தானத்திலே ரூ. 42. அதாவது 75 சதமானம் கூடுதல். மேற்படி சமஸ்தானம் சென்னை மாகாணத்தால் பெரிதும் சூழப்பட்டிருக்கிறது. எல்லையாக இயற்கை அரணும் இருக்கிறது. அப்படி யில்லாத இடங்களில் கிராமத்தின் ஒரு பகுதி மாகாணத்தைச் சேர்ந்ததாயிருக்கும்; மற்றொரு பகுதி சமஸ்தானத்தைச் சேர்ந்ததா யிருக்கும். தெருவில் ஒரு அற்றம் மாகாணத்திற்கு, மறு அற்றம் சமஸ்தானத்திற்கு. இன்னொரு தெருவிலே ஒரு வரிசை மாகாணத்தி லுடையது. எதிர் வரிசை சமஸ்தானத்தி லுடையது. நன்செய்—புன்செய்களும் அப்படித்தான் இருக்கின்றன. ஒரு வயல்காரன் மாகாணத்திற்குக் கிஸ்தி கொடுக்கிறான்; அடுத்த நிலக்காரன் சமஸ்தானத்திற்குக் 'கரம்' கட்டுகிறான். இங்கேதான் ஆபத்து ஆரம்பிக்கிறது.

இருவரும் ஒன்றுபோல பாடுபட்டனர். ஒரு வயல் நெல் விலை கோட்டைக்கு ரூ. 24; மற்ற வயல் நெல்விலை கோட்டைக்கு ரூ. 42. எவ்வளவு வித்தியாசம்! ஆகவே, திருட்டுத்தன வேலைகளில் மக்கள் இறங்கவேண்டியிருக்கிறது. நெல், வயலில் கட்டாகக் கடத்தப்படுகிறது. களத்தில் கூடையாகக் கடத்தப்படுகிறது. வீட்டில் சுமையாகக் கடத்தப்படுகிறது. தெருவில் மூட்டையாகக் கடத்தப்படுகிறது. கிராமம் விட்டுக் கிராமம் வண்டியில் கடத்தப்படுகிறது. இப்படி கடத்தப்படாமலிருக்கக் காவலாக ஏகப்பட்ட போலீஸ். ஸீஸர்ஸ் பார்ட்டி. எப்படி இருக்கிறது மூடத்தனமான கண்ட்ரோலின் இலக்ஷணம்?

திருவிதாங்கூர் இந்திய யூனியனைச் சேர்ந்த ஒரு சமஸ்தானம். உறக்குக்குள்ளே இறக்கும் மேற்கும் என்பதுபோல, பிரிக்கமுடியாத இந்த எல்லையோரப் பிரதேசங்களிலே கண்ட்ரோல் என்ற நச்சுக் காற்றும் விலை வித்தியாசத்தினாலும் ஏற்படும் இன்னல்கள் பல. மோதல்கள் அநேகம், சிக்கல்கள் அனந்தம்.

குறிப்பாக, சென்னை மாகாண கிராமங்களிலுள்ள விவசாயிகளுக்கு அதிக உற்பத்தியில் அசிரத்தை ஏற்படுகிறது. அடுத்தவனைப் போல தங்கள் உழைப்பிற்கும் போதிய ஊதியம் கொடுக்கப்படவில்லையென மாகாண சர்க்காரிடம் மனக்கசப்பு உண்டாகிறது. விலை உயர்வு கருதி, உற்பத்தியில் ஒரு பகுதி சாமர்த்தியமாகக் கடத்தப்பட்டுக் கொண்டேயிருக்கிறது. மாகாணத்தில் ஏற்கனவே உள்ள பற்றாக்குறை இன்னும் அதிகமாகிறது.

பி. தர்மாம்பாள்

★ ★ வட்டமேஜைப் பரிசுத் தொகை ரூ. 25-ஐ, கொழும்பு கே. வி. என். ஆதிபோடிக்கும், மாம்பலம் ஏ. கே. பட்டுசாமிக்கும் ரூ. 12—8—0 விதம் பிரித்து வழங்கப்பட்டது.

சேலம்
15—11—48

## சர்க்கார் கவனிக்குமா?

'கல்கி' ஆசிரியர் அவர்களுக்கு,

இவ்வூரில் அரிசி கிடைப்பது பவுன் போலிருக்கிறது. முன்பாவது ரேஷனுக்குக் கோதுமை கொடுத்து வந்தார்கள். இப்பொழுது அந்த இரண்டு அவுன்ஸ் கோதுமை கொடுப்பதையும் நிறுத்தி விட்டார்கள். அடுப்பில் உலை நீரை வைத்துவிட்டு அரிசி வாங்க ரேஷன் டிப்போவுக்குப் போனால் கும்பலில் இரண்டு மூன்று மணி நேரம் நின்ற பிறகு நாற்றமாயும், ஒரே கறுப்பாயுமுள்ள புழுங்கலரிசி போடுகிறார்கள். அதைச் சமைத்தால் ஒவ்வொரு சோற்றுப் பருக்கையும் அரக்குவண்டைப் போல் பயங்கரமாகக் காட்சியளிக்கிறது. இந்தச் சாப்பாட்டைச் சாப்பிடாமல் பள்ளிக்கூடத்திற்குப் போவோமென்றால் பசி காதை அடைக்கிறது. நடக்க முடிவதில்லை. பள்ளிக்கூடத்தில் நடக்கும் பாடங்களை கவனிக்க முடியாமல் ஒரே மயக்கமாக வருகிறது. சாயங்காலம் அலுத்துப்போய் வீடு திரும்பி வந்தால் பழையபடி அதே குண்டு சாதத்தைப் பார்த்தவுடன் மயக்கம் வந்து விடுகிறது. அம்மாவிடம் கோதுமை ரொட்டி ஏதாவது செய்து கொடு என்று கேட்டால், ரேஷன் ஷாப்பில் கோதுமை கொடுப்பதில்லையே என்கிறாள். பிறகு தெய்வமே என்று இரண்டு பழத்தைச் சாப்பிட்டு விட்டுப் படுத்துக்கொள்ள வேண்டியதுதான். வெளியில் 'கறுப்பு மார்க்கெட்'டில் அரிசி இரண்டு படி ஒன்றுக்கு ஒரு ரூபாய் விதம் விற்கிறது. அதை வாங்கிச் சாப்பிட நம் பெற்றோர்களுக்குக் கிடைக்கும் சொற்பச் சம்பளம் எப்படி போதும்? சம்பளத்தில் அரிசியை வாங்கி விட்டால் பாக்கி வீட்டுச் செலவிற்கு என்ன செய்வது?

பி. என். துளசி

* * * * * * * * *

Nattandia
22—11—48

## உணவுப் பஞ்சம் தீருமா?

'கல்கி' ஆசிரியர் அவர்களுக்கு.

தாங்கள் 21—11—48ல் பிரசுரமான கல்கியில் 100-க்கு 90 பங்கு உணவுப் பொருள் உற்பத்தி ஆகிறது என்று குறிப்பிட்டது முக்காலும் உண்மையே. மீதி பத்து சதவிகிதத்தை உற்பத்தி செய்வதை விட்டு விட்டு சர்க்கார் கண்ட்ரோல் என்றும் கட்டுப்பாடு என்று சொல்லிக்கொண்டு நேரத்தைச் செலவழிக்கிறார்கள்.

திருநெல்வேலியைச் சேர்ந்த நாமாவடி என்ற எங்கள் ஊரிலே சுமார் 50 ஏக்கர் நிலம் சாகுபடி ஆகாமல் கிடக்கிறது. சுமார் 300 ஏக்கர் நிலம் வாய்க்காலில் நிரம்பத் தண்ணீர் வந்தாலும் ஒரு போகந்தான் பயிர் செய்வார்கள். மற்றொரு போகம் விதைத்தால் ஏக்கர் ஒன்றுக்கு ரூ. 20 முதல் ரூ. 80 வரை சர்க்கார் அபராதம் விதிக்கிறார்கள்.

இம்மாதிரி சர்க்கார் அதிகாரிகள் நடந்து கொண்டால் உணவுப் பஞ்சம் தீருவது எது?

டி. ராமசாமி நாடார்

# புலி வரப்போகிறதாம்!






# பவழ மல்லிகை

கி. ரா. கோபாலன்

**வா**சற் பக்கத்து ஜன்னலுக்கு வெளியே இருந்த பவழ மல்லிகை மரம் பூத்துக் குலுங்கிக் கொண்டிருந்தது. அதிகாலை. சங்கரன் நித்திரை கலைந்து எழுந்தான். அப்பொழுது முற்றிலும் சோர்ந்து கிடந்த அவன் மனதைப் பவழ மல்லிகையின் மெல்லிய மணம்தான் கிளர்ச்சி கொள்ளச் செய்தது. அவன் சட்டென்று எழுந்து ஜன்னலில் போய் உட்கார்ந்து வெளியே பார்த்தான். கார்த்திகை மாதத்துப் பனி மூட்டம் அப்பொழுதுதான் கொஞ்சம் கொஞ்சமாகக் கலைந்து கொண்டிருந்தது. பனித் துளி பட்டு ஈரமடைந்திருந்த பூமியில் அந்தச் சிறிய பவழ மல்லிகை மரம் சுமை தாங்க மாட்டாது மலர்களைக் கொட்டிப் பரப்பியிருந்தது. சிவப்புக் காம்புகளுடன் ஒன்றின்மீது ஒன்றாக அவைகள் விழுந்திருந்தது பார்ப்பதற்கு ரம்மியமாக இருந்தது.

அந்தப் பவழ மல்லிகை மரம் எவ்வளவு நாட்களாக அந்த வீட்டு வாசலில் இருக்கிறது? அதை அவனால் திண்ணமாகச் சொல்ல முடியாது. அவன் நினைவுக் கெட்டிய காலம் முதலாக இருக்கிறது. அன்று பார்த்தது போல் இன்றும் சிறிது கூட மாறுதலில்லாமல் அப்படியே இருக்கிறது. ஜன்னல் வழியாக வெளியே தரையில் உதிர்ந்திருக்கும் மலர்களைப் பார்த்தவண்ணம் ஒரு பெருமூச்சு விட்டான். இன்று அந்த மலர்களை ஆவலோடு பொறுக்கிக் கொண்டுபோக ஒருவருமே யில்லை......முன்பெல்லாம் அவள் வந்து.........

**ஐ**ந்து வருடமாகி யிருக்குமோ ஆறு வருடமாகி யிருக்குமோ, அவனால் தெளிவாகச் சொல்ல முடியாது. ஆனால் அவள் நினைவு அழியவில்லை. அந்தப் பவழ மல்லிகை மரம் அன்றிருந்ததுபோல் இருப்பதுதான் அவள் நினைவு மறையாமலிருப்பதற்குக் காரணமா யிருக்கலாம். ஆனால் அந்த மரத்திற்கு மாத்திரம் துளிக்கூட வெட்கமில்லை — அந்த மலர்களைப் பொறுக்கிச் செல்ல இப்பொழுது தான் ஒருவருமில்லையே; இன்னும் ஏன் இப்படி பூக்களைக் கொட்டிக் கொண்டிருக்கவேண்டும்? என்று நினைந்த பொழுதுதான் பழைய காட்சி ஒன்று அவன் கண்ணெதிரில் நடப்பதுபோல் இருந்தது.

• • •

**ஒ**ரு சிறு தூக்குக் கூடையை எடுத்துக்கொண்டு மலர் பொறுக்குவதற்காக அவள் வருகிறாள். அவளுக்கு வயது சுமார் பதினைந்து அல்லது பதினாறு இருக்கலாம். கண்ணாடி வளையல் 'கல கல' வென்று ஒலிக்கும் நீண்ட மெல்லிய கைகள். அசைந்தாடும் கொடி போன்ற உருவம். இளம் சிவப்பான மேனி. உருட்டி உருட்டி விழிக்கும் அகன்ற அழகான

ண்கள். சதா வெட்கம் கலந்த புன்சிரிப்பில் குழியிடும் கன்னங்கள். வெள்ளையில் நீலப்பூப் போடப் பட்ட சீட்டிச் சித்தாடையும் பாவாடையும் உடுத்தியிருக்கும் மேனி. தளர்ந்து முதுகில் புரண்டு விழும் தலைப்பின்னல்! அந்த அழகியின் பெயர்தான் ஜானகி.

அவள் வரும் போதே கைவளையல்களின் ஓசை அரைகுறையான விழிப்பிலிருக்கும் சங்கரனைப் படுக்கையை விட்டு அவசர அவசரமாக எழச் செய்கிறது. அவன் எழுந்திருந்து ஜன்னல் வழியாக வாசற்பக்கம் பார்வையைச் செலுத்துகிறான். அவள் மரத்தடியில் மண்டியிட்டு உட்கார்ந்து கலுங்காமல் ஒவ்வொரு பூவாக எடுத்துக் கூடையில் போட்டு விட்டு எழுந்து நின்று சுற்றிலும் ஒரு தடவை தட்டுத்தவறி இன்னும் எங்கேனும் மலர்கள் கிடக்கிறதோ வென்று பார்க்கிறாள்.

மரத்தில் இன்னும் பூக்களிருக்கின்றன. அவள் கூடையை கீழே வைத்து விட்டு மரத்தை இரண்டு கைகளாலும் பிடித்து ஆட்டிக் குலுக்குகிறாள். அவளுடைய கை வளையல்களின் கல கல வென்ற ஒலியும் மரத்தின் சலசல வென்ற ஒலியும் சேர்ந்து ஏதோ இன்ப இசை பாடுவது போல்தான் சங்கரனுக்கு இருக்கிறது. அவளைப் பார்க்கப் பார்க்க அவனுக்கு ஒரு உவகையும் ஆர்வமும் ஏற்படுகிறது. மரத்திலிருந்து உதிர்ந்த மலர்களை மறுபடியும் உட்கார்ந்து சேகரிக்க ஆரம்பிக்கிறாள். சங்கரன் அப்பொழுதுதான் ஏதோ ஒரு பாட புத்தகத்தை எடுத்து வைத்துக் கொண்டு ஜன்னலில் உட்கார்ந்து சுருசுருப்புக் குறையாமல் உரத்த குரலில் ராகம் போட்டுப் படிக்க ஆரம்பிக்கிறான்.

கையில் புத்தகமிருந்தாலும் அவன் பார்வை முழுவதும் பவழமல்லிகை மரத்தடியில்தான் லயித்து நிற்கிறது. ஜானகி அவனுடைய குரலைக் கேட்டதும் மெதுவாகத் திரும்பிப் பார்க்கிறாள். ஆனால் அதற்குள் அவளுக்கு எவ்வளவு வெட்கம் வந்து விடுகிறது? தடுமாற்றத்துடன் கீழே சிதறிக் கிடக்கும் பாக்கிப் பூக்களை எடுத்துக் கூடையில் போட்டுக் கொண்டு அவசர அவசரமாக ஓடிவிடுகிறாள். அவள் சென்றவுடன் சங்கரனின் உரத்துப் பாடம் படிக்கும் குரல் உள்ளே அடங்கி விடுகிறது. புத்தகத்தை மூடிவைத்து விட்டு ஜன்னலில் சாய்ந்த படியே உட்கார்ந்து கனவோரத்தில் கண்ட காட்சியையே நினைவில் ஓடவிட்டு ரசித்துக் கொண்டிருக்கிறான்.




இப்படி ஒரு மௌன நாடகம் நாள் தவறாமல் நடந்து கொண்டு வந்தது. ஒவ்வொரு நாளும் நித்திரை கலைந்து எழுந்தவுடன் அவள் கண்ணில் விழித்தால்தான் அவனுக்கு மன நிம்மதியும் சந்தோஷமும் ஏற்படும்.

* * *

இப்படியே நாட்கள் ஓடிக் கொண்டிருந்தன. ஆனால் ஒருநாள் திடீரென்று அவள் வருவது நின்றுவிடும் என்று அவன் நினைக்கவேயில்லை. அவன் வீட்டிற்கு எதிர் வரிசையில்தான் அவளுடைய வீடுமிருக்கிறது என்று தெரியுமே தவிர வேறொன்றும் அவளைப் பற்றியோ அவளுடைய குடும்பத்தைப் பற்றியோ அவனுக்குத் தெரியாது. ஏன் அவள் வரவில்லை? ஒரு நாள், இரண்டு நாள் கழிந்தன. அவனுடைய மனத் துடிப்பு அதிகமாகியது. அவர்கள் குடியிருந்த வீடு பூட்டப் பட்டிருந்தது. எங்காவது வெளியூர் சென்றிருப்பார்கள் என்று மனதில் நிறுத்து சமாதானத்தை ஏற்படுத்திக் கொண்டான். ஆனால் அந்த வீட்டுக்கு ஒரு வாரத்திற்குள்ளேயே வேறு யாரோ குடி வந்திருப்பதைப் பார்த்ததும் அவனுடைய மன நிம்மதி குலைந்து விட்டது.

ஜானகியின் தகப்பனாருக்குத் தபாலாபீஸில் வேலையாம். அந்த ஊரிலிருந்து வேறு ஏதோ ஒரு ஊருக்கு அவர்களைத் திடீரென்று மாற்றிவிட்டார்களாம். இவ்வளவுதான் அவன் அந்தக் குடும்பத்தைப் பற்றித் தெருவில் விசாரித்ததில் தெரிந்து கொண்டது. அவன் மனது தனக்குத் தானாகவே பச்சாதாபப்பட்டு நொந்தது. அந்தத் தெருவில்தானே வசித்து வந்தார்கள் அந்தக் குடும்பத்தினர். அவர்களோடு நெருங்கிப் பழகி ஒரு தொடர்பை ஏற்படுத்திக் கொண்டிருக்கக் கூடாதா?

அவள்தான் தினமும் தவறாமல் பூப்பொறுக்குவதற்காக வந்து கொண்டிருந்தாளே! அவளோடு இரண்டொரு வார்த்தையாவது பேசியிருக்கக் கூடாதா? இனி அவளை அவனால் மறக்க முடியுமா? அவன் மறக்கத்தான் முயற்சித்தான். ஆனால் அந்தப் பவழமல்லிகை மரம் அவன் கண்ணெதிரில் பட்டு அவன் மனதில் கிளர்ச்சியை உண்டாக்கிக் கொண்டிருந்ததே? அவன் என்ன செய்வான்!

அதே ஜன்னலில் உட்கார்ந்துதான் அவன் அதி தீவிரமான யோசனையிலிறங்கியிருந்தான். யாரோ ஒரு பெண் மின்னலைப்போல் அவன் எதிரில் தோன்றி மறைந்தாலும் அவன் மனதில் எப்படிப்பட்ட கிளர்ச்சியை உண்டாக்கி விட்டாள்? அவன் தனக்காகவோ மற்றவர்களுக்காவோ இந்த உலகிற்காகவோ எதையும் கடமையாகக் கொண்டு செய்ததாகத் தெரியவில்லை. ஏதோ மனிதனாக உலவி வந்தானென்றுதான் சொல்லலாம். ஆனால் அந்தப் பவழ மல்லிகை மரம்? ... வெட்கம்! அதை லட்சியம் செய்பவர் இப்பொழுது யார்? அதன் மணம் நிறைந்த மலர்களை ஆர்வத்துடன் விரும்பி எடுத்துச் செல்பவர்கள் யாரிருக்கிறார்கள்? ஒருவரும் அதைத் திரும்பிப் பார்க்காத போது அது ஏன் ஒவ்வொரு நாளும் இவ்வளவு மலர்களை உண்டாக்கித் தரையில் கொட்டி வீணாக அடிக்கிறது?

அதற்கு இந்த உலகத்தின் மீதும் மனிதர்களின் மீதும் இன்னும் தீவிரமாக நம்பிக்கை இருக்கத்தான்வேண்டும். ஒவ்வொரு நாளும் விடாமல் இப்படி பூத்துச் சொரிந்து கொண்டிருந்தால் என்றைக்காவது யாராவது தன்னை விரும்பி வரமாட்டார்களா என்ற நம்பிக்கையில்தான் அது அப்படி செய்கிறது. அந்த மரத்திற்குள்ள அவ்வளவு நம்பிக்கையும் இடமும் கூட சங்கரனைப்போன்ற மனிதனுக்கு வாழ்க்கையில் கிடையாதா?

• • •

அவனுக்கு வயது கிட்டத்தட்ட முப்பதாகி விட்டது. இந்தத் தை மாதத்திலாவது அவனுக்கொரு கல்யாணத்தை முடித்து வைத்துவிட வேண்டுமென்ற தீர்மானத்தின் அவனுடைய மாமா ஒரு டஜனுக்கு மேற்பட்ட பெண் ஜாதகங்களை அவனுக்கு அனுப்பிப்பொருத்தமான ஜாதகம் ஒன்றைப் பார்த்துப் பொறுக்கியனுப்பும்படி கடிதம் எழுதியிருந்தார். இவ்வளவு நேரம் ஜன்னலிலே உட்கார்ந்து குழம்பிக் கொண்டிருந்த அவன் சட்டென்று ஒரு தீர்மானத்திற்கு வந்தவன் போல் எழுந்து மேஜைக்குச் சமீபமாக வந்தான். மேஜை மீது கிடந்த ஜாதகங்களை ஒவ்வொன்றாக எடுத்துப் பார்த்தான்.

அன்று மத்தியானம் ஜோசியர் எல்லா ஜாதகங்களையும் சோதித்து விட்டு ஏதோ ஒரு ஜாதகம் மிகவும் பொருத்தமாக இருப்பதாகச் சொல்லி அவனிடம் கொடுத்தார். அந்த ஜாதகத்தைச் சங்கரன் தன் மாமாவிற்கு அனுப்பி அந்தப் பெண்ணைப் பார்க்க விரும்புவதாக எழுதினான். காலத்திலே மாமாவிடமிருந்து அந்தப் பெண்ணை உடனே போய்ப் பார்க்கும்படி பதிலும், அந்தப் பெண் இருக்கும் விலாசமும் கிடைத்தன. மறுநாளே அவன் அந்தப் பெண்ணைப் பார்க்க விருத்தாசலத்திற்குப் புறப்பட்டான்.

அந்த வீட்டிலிருந்து அவனை வரவேற்று உபசரித்த வயதான மனிதரை அவன் எப்பொழுதோ எங்கோ பார்த்த ஞாபகமாக இருந்தது. சிறிது நேரம் யோசித்தான். தெளிவாகவில்லை. எப்பொழுதும் பெண்ணைப் பெற்ற மனிதர் கல்யாணம் செய்து கொள்ளத் துணிந்து வரும் பையனோடு பேசும் குழைவும் அபிநயமும் குறையாமல் அவனோடு பேசினார் அந்த மனிதர். "என்னை உங்களுக்குத் தெரிந்திருக்குமே......?" என்றார் ஒரு அசட்டுச் சிரிப்புடன்.

"தெரியும் போலத்தான் இருக்கிறது. ஆனால் சரியாக ஞாபகமில்லை."

"இருக்காது! ஐந்தாறு வருஷமாச்சே... உங்க ஊரிலே உங்க தெருவிலேதான் நானிருந்தேன். அப்பொழுதெல்லாம் எங்க ஜானகிக்கு வயது பதினைந்துதானிருக்கும். அப்பொழுதிருந்துதான் வரன்களைப் பார்த்துக்கொண்டு வருகிறேன். வேளையும் பொழுதும் சேரவேணும் என்று சொல்லுவார்கள். உங்களுக்குப் பிராப்தமிருக்கச்சே...... அதிருக்கட்டும். உங்க வீட்டு வாசலிலே ஒரு பவழ மல்லிகை மரமிருக்குமே, அது இன்னும் இருக்கா? எங்க ஜானகி அதை இன்னும் மறக்கவேயில்லை. இந்த ஊரிலே சுவாமி பூஜைக்கு நல்ல பூ கிடைப்பது மகா கஷ்டமாயிருக்கிறது."

சங்கரனுக்கு இதைக் கேட்டதும் ஏற்பட்ட ஆச்சரியம் அளவிடங்காததாயிருந்தது. அந்த வீட்டுத் தாழ்வாரத்தில் ஒரு நாற்காலியில்தான் அவன் உட்கார்ந்திருந்தான். இருந்தாலும் அந்த நாற்காலி ஆகாயத்தில் பறக்கக் கிளம்பிவிடுமோ என்று அச்சப்படுகிறவன்போல் தரையில் காலை நன்றாக ஊன்றிக் கொண்டான்.

ஜானகி வந்து அவனை நமஸ்காரம் செய்தாள். இந்த ஐந்தாறு வருஷத்தில் அவள் எவ்வளவு மாறிவிட்டாள்! உருவம், அழகு எல்லாவற்றிலும். ஆனால் இந்த வளர்ச்சி — மாறுதல் அவன் விரும்பக்கூடிய அழகாகத்தான் மாறியிருந்தது. அப்பொழுதுதான் உலகத்தில் அவன் வாழ்க்கையும் அவனுடைய வீட்டுவாசலில் இருக்கும் பவழ மல்லிகைமரத்தின் வாழ்க்கையும் வீணானவை அல்லவென்று அவன் உணர்ந்தான்.



# படை
## பறந்து போகும்

சரும வியாதிக்கு சீக்கிரம் குணம் காண! "சைபால்" மேல் பூசுங்கள். மற்ற இடங்களுக்குப் பரவாமல் தடுப்பதுடன், சருமத்தை சுத்தப்படுத்தும். கொப்புளங்கள், சொரி, சிரங்கு, படை, பரு, கடி, கால் வெடிப்பு, புண்களுக்கு ஆச்சரியமாய் குணமளிக்கவல்ல மருந்து.

**CIBOL**
சைபால்

தயாரிப்பவர்கள்:
ஸௌத் இந்தியன்
மான்யுபாக்சரிங் கம்பெனி
மதுரை.

ஏஜண்டுகள்: மெஸர்ஸ். சீதாராம ஜெனரல் ஸ்டோர்ஸ் ஏஜென்ஸீஸ், பெஜவாடா, செகந்திராபாத் & பெர்ஹாம்பூர்; ஸ்ரீ கிரிஜா மெடிகல் ஸ்டோர்ஸ், பெங்களூர் ஸிடி; மெஸர்ஸ். ராஜன் டிரக் ஸ்டோர்ஸ், மதராஸ்

---



## பார்லிக்கஞ்சியை இம்முறையில் தயாரித்தால் நேரமும் சிரமமும் குறையும்

ஐந்தே நிமிஷத்தில் ருசியும் இனிமையும் மிகுந்த பார்லிக்கஞ்சி சாப்பிடலாம். இரண்டு டீஸ்பூன் நிறைய பியூரிடி பார்லியை எடுத்து சிறிது ஜலத்தில் பசையாகக் கரைத்து. பின் இரண்டு டம்ளர் ஜலம் விட்டு ஐந்தே நிமிஷங்களுக்கு கொதிக்கவைக்கவும். இது உபயோகிப்பதற்கு வெகு சிக்கனமானது. ஏனெனில் அரிசிப்பார்லியைப்போல் எட்டு மடங்கு அதிக புஷ்டியுள்ளது.

பியூரிடி பார்லி சுகாதாரமுள்ள சீதள பிரதேசங்களில் விளையும் புஷ்டி மிகுந்த தானியங்களை பதப்படுத்து தயாரிக்கப்படுகிறது. நுண்ணிய பட்டுகளில் சலிக்கப்பட்டு சுகாதார முறைப்படி தகர டப்பாக்களில் அடைத்து முத்திரையிடப்பட்டிருக்கிறது.




## பியூரிடி
## இந்தியன் பார்லி

அட்லாண்டிஸ் (ஈஸ்ட்) லிட், 20/1 செட்லா ரோடு, கல்கத்தா

தென்னிந்தியாவுக்கு ஏஜண்டுகள்:

மெஸர்ஸ். பாரி அண் கோ., லிமிடெட், த. பெ. நெ. 12. மதராஸ்



# டால்டாவில் வறுத்த உருளைக்கிழங்கு வடைகள்

## எச்சமயத்திலும் சுவைமிகுந்தவை!

உருளைக்கிழங்கை கழுவி தோலுடன் வேகவைக்கவும். கிழங்கு பதமானதும் தோலை அகற்றி சிறிது பால்விட்டு பொடி செய்யவும். ருசிக்குத்தக்குந்த படி உப்பும், மிளகு பொடியும், நறுக்கின கொத்தமல்லி இலையும் சேர்த்துக்கொள்ளவும். தட்டை வடைகளாகச்செய்து முட்டையின் வெள்ளைக் கருவிலோ அல்லது கரைத்த அரிசி மாவிலோ தோய்த்து, ரொட்டித் தூளிலோ மைதாமாவிலோ பிரட்டவும். பரந்த வாணலியில் டால்டாவை சூடாக்கி அதில் வடையின் இருபக்கங்களும் சிவக்கும் வரை வறுக்கவும். வடைகளை சுடச்சுட சாப்பிடுங்கள் — நீங்கள் அவைகளை மிகவும் விரும்புவீர்கள்! டால்டா, அதனால் செய்யப்பட்ட எல்லா பதார்த்தங்களின் சுவையையும் எடுத்துக்காட்டுகிறது.

## "சிவபெருமானின் நடனம்"

**6 வர்ணங்கள் கொண்ட கவர்ச்சிகரமான 1949 காலெண்டர்**

சில பிரதிகளே கைவசம் இருக்கின்றன. தபால் செலவுக்கு 4 அணா ஸ்டாம்பு சகிதம் உடனே எழுதுங்கள்.

**தி டால்டா அட்வைஸரி ஸர்வீஸ்**

தபால் பெட்டி நெ. 353, பம்பாய் 1

HVM. 74A-23 TM




Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, [illegible]adana Garden, Poonamallee High Road, Kilpauk, Madras



# டி.எஸ்.ஆர். கோகுல் ஹேர் ஆயில்




டி.எஸ்.ஆர். கோகுல் கூந்தல் தைலம் அதன் அரிய வாஸனைக்கும் அபூர்வ குணத்திற்கும் பெயர் போனது. இது கூந்தலை கருகருவென்று நீண்டு வளரச் செய்வதோடன்றி, மூளைக்கு குளு குளுப்பையும், அலாதி கறுகறுப்பை அளிக்கிறது.




## டி.எஸ்.ஆர் & கோ., கும்பகோணம்.

மதராஸ் ஏஜண்டு:
புஷ்பவனம் ஸ்டோர்ஸ்
பைகிராப்ட்ஸ் ரோடு
திருவல்லிக்கேணி :: மதராஸ்

கோவை, நீலகிரி ஜில்லாக்கள்
& பாலக்காடுக்கு ஏஜண்டு:
B. பாலபட்டாபி
( Estd. 1933 )
P. B. No. 182, கோயமுத்தூர்

---

## "லங்கர்" மார்க்

## வாசனை பாக்குத் தூள்




★

அசல்

## பாதாம் எண்ணை

★

## ரோஜாப்பூ

## குல்கந்து

★

## ரஷிக்லால் & கோ.,

கோவிந்தப்ப நாயக்கன் தெரு
மதராஸ் - 1

